# அழகப்பா பல்கலைக்கழகம்

தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதியும்
மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல் தரப்
பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது)

காரைக்குடி - 630003

## தொலைநிலைக்கல்வி இயக்ககம்

### இளங்கலை - வணிகநிர்வாகம்

### இரண்டாமாண்டு - நான்காம் பருவம்

### தாள்: 104 43

# ஆய்வு முறைகள்

# ஆராய்ச்சி அறிமுகம்

**பொருளடக்கம்** **பக்கம்□எண்**

# ஆராய்ச்சி அறிமுகம்

**பொருளடக்கம்** **பக்கம் எண்**

**அலகு - 13 பக் 227 - 259**

**மேலோட்டம் அளவுரு அல்லாத சோதனைகள்**

கட்டமைப்பு

**அலகு - 14** **பக் 260 - 298**

## அறிக்கை எழுதுதல்

கட்டமைப்பு

# ஆராய்ச்சி முறைகள்

## அலகு – 1:

## ஆராய்ச்சி அறிமுகம், நோக்கம் மற்றும் ஆராய்ச்சி செயல்முறைகள்

குறிப்பு

1.1. ஆராய்ச்சி – அறிமுகம்
1.2. ஆராய்ச்சி – வரைவிலக்கணம்
1.3. ஆராய்ச்சியின் குற்க்கோள்கள்
1.4. ஆராய்ச்சியின் நோக்கங்கள்
1.5 ஆராய்ச்சியின் செயல்முறைகள் (Process of Research)
1.6. ஆராய்ச்சியின் வகைகள்
1.7 சுருக்கம்
1.8 புரிதலை சோதிக்கும் வினாக்கள்
1.9. பயிற்சி வினாக்கள்
1.10. மேலும் பயில புத்தகங்கள்

### 1.1. ஆராய்ச்சி – அறிமுகம்

பொதுவாக புதிய கண்டுபிடிப்புகள் ஆராய்ச்சி மூலம் கிடைக்கிறது மேலும் நாட்டில், சமுதாயத்தில் அல்லது ஒரு நிறுவனத்தில் நிலவும் சில பிரச்சனைகளுக்கு ஆராய்ச்சிகள் வாயிலாக பல நேரங்களில் தீர்வுகள் எட்டப்படுகின்றன. ஆராய்ச்சி என்கிற சொல்லானது அறிவுக்கான தேடல் என்கிற பொருளினை குறிக்கிறது. ஆராய்ச்சி என்பது ஒரு புதிய அறிவாகவோ அல்லது ஏற்கனவே உள்ள அறிவில் புதிய வழியில் கூடுதல் அறிவினை சேர்ப்பதாகவோ இருக்கலாம். இவ்வாறு சேர்க்கப்படுவது புதிய கருத்தாகவோ, புதிய முறையாகவோ அல்லது புதிய புரிதலாகவோ இருக்கலாம். ஆராய்ச்சி என்பது ஒரு குறிப்பிட்ட தலைப்பில் முறையான அறிவியல் கருவிகளை பயன்படுத்தி அது தொடர்பான விவரங்கள் அல்லது அதற்கான தீர்வினை கண்டறிவதாகும். உண்மையில் ஆராய்ச்சி என்பது அறிவியல் ரீதியாக விசாரணை செய்யும் ஒரு கலையாகும்.

### 1.2. ஆராய்ச்சி – வரைவிலக்கணம்

கிளிப்போர்டு வுட்டி என்பவர் ஆராய்ச்சியினை இவ்வாறு வரையறை செய்கிறார், “ஆராய்ச்சி என்பது ஒரு பிரச்சனையை

குறிப்பு

வரையறுப்பது, மறுவரையறை செய்வது, கருதுகோள் (hypothesis) உருவாக்குவது அல்லது தீர்வினை பரிந்துரைப்பது, தகவல்களை சேகரிப்பது, அவற்றை ஒழுங்கமைப்பது மற்றும் அவற்றை மதிப்பீடு செய்வது, தள்ளுபடிகள் செய்வது மற்றும் ஆராய்ச்சி முடிவுகளை தருவது மேலும் ஆராய்ச்சி முடிவுகளானது, உருவாக்கப்பட்ட கருதுகோள்களுக்கு பொருத்தமானதா என்பதை மிக கவனமாக சோதனை செய்வதாகும்".

ஆராய்ச்சி செய்வதற்கு வல வழிகள் உள்ளன, எனினும் அதை செய்வதற்கு இரண்டு பெரும்பான்மையான வழிகள் உள்ளன, அவை தரஅடிப்படையிலானது (Qualitative) மற்றும் அளவு அடிப்படையிலானது. தர அடிப்படையிலான ஆராய்ச்சியானது மனிதனின் அனுபவத்தின் தரம், சிக்கல்கள் ஆகியவற்றைப் பற்றி படிப்பதாகும். அளவு அடிப்படையிளலான (Quantitative) ஆராய்ச்சியானது சேகரிக்கப்பட்ட தகவல்களை கணித வடிவில் பதிவு செய்கிறது, மேலும் அவற்றை பயன்படுத்தி புள்ளியியல் கருவிகளை கொண்டு ஆராய்ச்சி முடிவுகள் பெறப்பட்டு பதிவு செய்யப்படுகிறது. இவ்விரு வகையான ஆராய்ச்சிகளுக்கிடையே கோட்பாடு ரீதியான, தத்துவ அடிப்படையிலான கருத்துருக்கள், அறிவின் தன்மை, உண்மைத்தன்மை, பதிவு செய்யும் முறைகள் இவ்வகை ஆராய்ச்சிகளில் ஆராய்ச்சியாளரின் செயல்முறைகள் ஆகியவற்றின் அடிப்படையில் பல வேறுபாடுகள் உள்ளன.

## 1.3. ஆராய்ச்சியின் குறிக்கோள்கள்

ஒரு ஆராய்ச்சியின் நோக்கங்களை பின்வருமாறு கூறலாம்.

- தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு நிகழ்வினை நுணுக்கமாக ஆராய்வது அதை தர்க்க, பகுத்தறிவு மற்றும் நடைமுறை ரீதியாக விளக்குவது.
- இதுவரை செய்யப்படாத வகையில் சாத்தியக்கூறுகள் மற்றும் செயல்முறைகளை ஆராய்வது.
- ஏதாவது ஒரு துறையில் தற்போது உள்ள அமைப்பு மற்றும் நடைமுறைகளை மேம்படுத்துதல்.
- தற்போது அல்லது மிக அருகாமையில் உள்ள எதிர்வரும் காலத்திற்கு தேவைப்படும் வகையில் புதியனவற்றை ஆராய்வது.
- இரண்டு மாறிகளுக்கு (variable) இடையே சாதாரணமாக உள்ள உறவின் மீதான கருதுகோளினை சோதனை செய்வது.

- கடந்த காலத்தில் உள்ள கதவல்களை பயன்படுத்தி போக்கு (trend), வடிவம் (pattern) மற்றும் உறவு ஆகியவற்றை பகுத்தாய்வது.



## 1.4. ஆராய்ச்சியின் நோக்கங்கள்

எந்த ஒரு பாடத்தில் மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சியாக இருந்தாலும் அது நான்கு நோக்கங்களை கொண்டுள்ளது. அவை, விவரித்தல், விளக்குதல், கணித்தல் மற்றும் நிகழ்வுகளை கட்டுப்படுத்துதல். அவை கீழே விளக்கப்பட்டுள்ளன.

### (அ) விவரித்தல் மற்றும் விளக்குதல் (Describing and Explaining)

இது நாம் ஆராய்ச்சி செய்யும் உலகினை புரிந்துகொள்வதற்கான முயற்சியாகும். ஆராய்ச்சியானது அறிவை பெறுவது, உண்மையை நிறுவுவது மற்றும் புதிய முறைகளை மேம்படுத்துவது சம்பந்தப்பட்டதாகும். இந்த புதிதலானது ஏற்கனவே மேம்படுத்தப்பட்ட கோட்பாடுகள் மற்றும் அவற்றின் செயல்திறன் போன்றவற்றை விளக்குவதாகும்.

### (ஆ) கணித்தல் (Predictioin)

ஆராய்ச்சியில் கணித்தல் என்பது வழக்கமாக கருதுகோளாக ஏற்படுத்தப்படுகிறது. அதாவது தெளிவற்ற ஒரு கருத்தினை அறிக்கையாக தயார்செய்து அதை அறிவியல் ரீதியாக சரிபாாத்த்து அதை ஏற்றுக்கொள்வதா அல்லது மறுதப்பதா என்பதை செய்யும் செயல்முறையாகும். அவ்வாறு ஒரு கருதுகோளினை ஏற்றுக்கொள்ளவோ அல்லது மறுக்கவோ செய்யும்போது, அதை நாம் பொதுமைப்படுத்தவோ அல்லது அதன் அதன் அடிப்படையில் பல்வேறு சூழல்களுக்கு கோட்பாடுகளை உருவாக்கவோ முடிகிறது. அதாவது ஆராய்ச்சியின் முடிவில் சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு சில நிகழ்வுகள் இவ்வாறு நிகழலாம் என்பதனை கூறமுடிகிறது.

### (இ) கட்டுப்படுத்துதல் (Control)

இது கருதுகோள்களை சரிபார்த்த பின்னர் மற்றும் நமது அறிவின் அடிப்படையில் தொடர்கிறது. கட்டுப்படுத்துதல் என்பது நடைமுறை பிரச்சனைகளில் தீர்வு காண்பதற்காக ஆராய்ச்சியானது எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதை குறிக்கிறது.

## 1.5 ஆராய்ச்சியின் செயல்முறைகள் (Process of Research)

குறிப்பு

முறையாக ஒரு சமூக அறிவியல் ஆராய்ச்சியினை செய்யவேண்டுமெனில் அதை அறிவியல் பூர்வமாக முறையாக அதற்குன்டான செயல்முறைகளை பின்பற்ற வேண்டும். ஒரு ஆராய்ச்சியை திறம்படவும் அதன் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் விதமாகவும் செய்யப்பட வேண்டுமாயின் அவ்வாராய்ச்சியாளர் ஆராய்ச்சியின் செயல்முறைகளை கடுமையாக பின்பற்ற வேண்டும். ஆராய்ச்சியின் செயல்முறைகளாவன.

- ஆராய்ச்சிக்கான தேவையை நியாயப்படுத்துவது (Justifying the need for research)
- ஆராய்ச்சிக்கான பிரச்சனைகள் மற்றும் குற்க்கோள்கனை வரையறுத்தல் (Define Problems and Objectives)
- ஆராய்ச்சிக்கான தகவல்களின் தேவை அறிதல் (Identifying data need)
- தகவல்களின் மூலத்தை கண்டறிதல் (Identifying Sources of Data)
- பொருத்தமான ஆராய்ச்சி வடிவமைப்பை தேர்ந்தெடுத்தல் (Choosing Research Design)
- பொருத்தமான தகவல் திரட்டும் முறையை தேர்ந்தெடுத்தல் (Choosing Method of Data Collection)
- ஆராய்ச்சிக்கான கருவிகளை தேர்ந்தெடுத்தல் அல்லது வடிவமைத்தல் (Designing or Choosing Research Tools)
- மாதிரிகளை அடையாளம் காணுதல் (Identifying the Sample)
- தகவல்களை திரட்டுதல் (Collecting Data)
- பகுத்தாய்தல் (Analysis)
- முடிவுகளை விளக்குதல் (Interpretation)
- ஆராய்ச்சி அறிக்கை தயாரித்தல் (Report Writing)

மேற்கண்ட ஆராய்ச்சியின் செயல்முறைகள் கீழே விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

### (அ) ஆராய்ச்சிக்கான தேவையை நியாயப்படுத்துவது (Justifying the need for research)

முதலில் நாம் எந்த ஆராய்ச்சியை மேற்கொள்ள வேண்டும் என முடிவெடுக்க வேண்டும். ஒரு சமூக அறிவியல் பாடத்தில் எண்ணற்ற கிளைகள் உள்ளன, அவற்றுள் நாம் எதில் ஆராய்ச்சி செய்கின்றோம் என்பதையும் அதற்கான தேவையின் நியாயத்தையும் விளக்க வேண்டும். இதுவே சமூக அறிவியல் பாடத்தில் ஆராய்ச்சி செய்வதில் உள்ள படிநிலைகளில் முதன்மையானதாகும்.

**(ஆ) ஆராய்ச்சிக்கான பிரச்சனைகள் மற்றும் குற்க்கோள்கனை வரையறுத்தல் (Define Problems and Objectives)**

குறிப்பு

அடுத்ததாக, ஆராய்ச்சி செய்வதற்கு நாம் எடுத்த பிரச்சனையை வரையறுத்த பிறகு அதற்கான குறிக்கோள்களை உருவாக்க வேண்டும். அவ்வாறு வரையறுக்கப்படும் குறிக்கோள்களானது தெளிவாகவும் சுருக்கமாகவும் அமைதல் வேண்டும்.

**(இ) ஆராய்ச்சிக்கான தகவல்களின் தேவை அறிதல் (Identifying data need)**

எவ்வகை ஆராய்ச்சியினை மேற்கொள்வதாக இருந்தாலும் அதற்கு சில தகவல்கள் தேவைப்படுகின்றன. ஆராய்ச்சிக்கான குறிக்கோள்களை வரையறுத்த பிறகு ஆராய்ச்சியாளர் அவர் மேற்கொள்ளும் ஆராய்ச்சிக்கான தேவைப்படும் தகவல்கள் என்னென்ன என்பதை அடையாளம் காண வேண்டும்.

**(ஈ) தகவல்களின் மூலத்தை கண்டறிதல் (Identifying Sources of Data)**

மேற்கண்டவாறு தேவையான தகவல்களை அடையாளம் கண்டபிறகு. அத்தகவல்கள் எங்கெங்கு கிடைக்கும் என்கிற தகவல் மூலத்தை அறிய வேண்டும். அவ்வாறு அறிவதன் வாயிலாக ஆராய்ச்சியாளர் அத்தகவல்களை எளிமையாக திரட்ட முடியும்.

**(உ) பொருத்தமான ஆராய்ச்சி வடிவமைப்பை தேர்ந்தெடுத்தல் (Choosing Research Design)**

ஆராய்ச்சிகளை மேற்கொள்ள ஏற்கனவே பல்வேறு வடிவமைப்புகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. அவற்றுள் ஆராய்ச்சியாளர் மேற்கொள்ளும் ஆராய்ச்சிக்கு பொருத்தமான ஆராய்ச்சி வடிவமைப்பை தேர்ந்தெடுத்துக்கொள்வது அவசியமாகும்.

**(ஊ) பொருத்தமான தகவல் திரட்டும் முறையை தேர்ந்தெடுத்தல் (Choosing Method of Data Collection)**

ஒரு ஆராய்ச்சிக்கு தேவையான தகவல்களை திரட்டுவதற்கு பல்வேறு முறைகள் உள்ளன. அவற்றுள் ஆராய்ச்சியாளர் மேற்கொள்ளும் ஆராய்ச்சிக்கு பொருத்தமான தகவல் திரட்டும் முறையை தேர்ந்தெடுத்துக்கொள்வது அவசியமாகும்.

**(எ) ஆராய்ச்சிக்கான கருவிகளை தேர்ந்தெடுத்தல் அல்லது வடிவமைத்தல் (Designing or Choosing Research Tools)**

ஒரு ஆராய்ச்சியை மேற்கொள்வதற்கு திரட்டப்பட்ட தகவல்களை பகுப்பாய்வு செய்வது அவசியமாகும். பெரும்பாலும் இவை பல்வேறு புள்ளியியல் கருவிகளை கொண்டு செய்யப்படுகிறது. மேலும் ஒரு சில

ஆராய்ச்சியாளர்கள் தங்கள் ஆராய்ச்சிக்கென தனியாக இக்கருவிகளை வடிவமைத்துக்கொள்கின்றனர். எதுவாயினும் ஆராய்ச்சியாளர் அவரது ஆராய்ச்சிக்கான கருவிகளை தேர்ந்தெடுப்பதோ அல்லது வடிவமைத்துக்கொள்வதோ அவசியமாகும்.

**(ஏ) மாதிரிகளை அடையாளம் காணுதல் (Identifying the Sample)**

ஒரு ஆராய்ச்சியில் மக்கள் தொகை என்பது, அது எந்த துறையில் செய்யப்படுகிறதோ அதில் தொடர்புடைய அனைத்து நபர்கள் அல்லது அனைத்து அலகுகளையும் குறிக்கும். அம்மக்கள் தொகை அளவில் அதிகமாக இருக்கும்போது, அனைத்து நபர்களிடமிருந்தோ அல்லது அலகுகளிடமிருந்தோ தகவல்களை திரட்டுவது என்பது இயலாத ஒன்றாகும். அச்சூழலில், அம்மக்கள்தொகையிலிருந்து மாதிரிகள் தேர்ந்தெட:க்கப்பட்டு அவ்ற்றிடமிருந்து தகவல்கள் பெறப்பட்டு அது பொதுமைப்படுத்தப்படுகிறது. அம்மாதிரிகளை தேர்ந்தெடுப்பதற்கு பல்வேறு முறைகள் உள்ளன. அவற்றில் ஏதேனும் ஒன்றிரண்டை பயன்படுத்தி ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சிக்கான மாதிரிகளை தேர்ந்தெடுத்துக்கொள்ளவேண்டும்.

**(ஐ) தகவல்களை திரட்டுதல் (Collecting Data)**

பொதுவாக ஆராய்ச்சிக்கு தேவைப்படும் தகவல்களை முதன்மை தகவல்கள் (Primary data) மற்றும் இரண்டாம்நிலை தகவல்கள் (Secondary data) என பிரிக்கலாம். ஒரு சில ஆராய்ச்சிகளுக்கு முதன்மைத் தகவல்கள் தேவைப்படலாம், ஒரு சில ஆராய்ச்சிகளுக்கு இரண்டாம்நிலை தகவல்கள் தேவைப்படலாம் மற்றும் ஒரு சில ஆராய்ச்சிகளுக்கு இவ்விரண்டு வகையான தகவல்களும் தேவைப்படலாம். ஏற்கனவே உள்ள ஆராய்ச்சி செயல்முறைகளில், ஒரு ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சிக்கு தேவைப்படும் தகவல்களை கண்டறிந்து அது கிடைக்கும் மூலங்களையும் அடையாளம் காணவேண்டும் என பார்க்கப்பட்டது. அதன்படி ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சிக்கு தேவையான தகவல்களை திரட்ட வேண்டும். முதன்மைத் தகவல்களை திரட்டும்போது வினாப்பட்டியல் (Questionnaire), நேர்காணல் அட்டவணை (Interview Schedule) போன்ற கருவிகள் பிரபலமாக பயன்படுத்தப்படுகின்றன. இரண்டாம் நிலைத் தகவல்களை திரட்டுவதற்கும் பல்வேறு முறைகள் பயன்படுத்தப்பட்டு தகவல்கள் திரட்டப்படுகின்றன.

**(ஒ) பகுத்தாய்தல் (Analysis)**

அடுத்ததாக, ஆராய்ச்சியாளர் தொகுக்கப்பட்ட தகவல்களை மேலே குறிப்பிட்டப்படி தேர்வு செய்த பொருத்தமான புள்ளியியல் கருவிகளை பயன்படுத்தி பகுப்பாய்வு செய்யவேண்டும். அவ்வாறு பகுப்பாய்வு செய்யும்போது ஆராய்ச்சியாளருக்கு அவர் மேற்கொள்ளும்

ஆராய்ச்சி முடிவுகள் கணித வடிவில் கிடைக்கின்றன. அதன்பிறகு அம்முடிவுகளை முறையாகவும் புரியும் விதத்திலும் அட்டவணைப்படுத்த வேண்டும்.



**(ஓ) முடிவுகளை விளக்குதல் (Interpretation)**

மேற்கண்டவாறு ஆராய்ச்சி முடிவுகளை அட்டவணைப்படுத்தப்பட்ட பிறகு. அம்முடிவுகள் முறையாக புரியும் விதத்தில் விளக்கப்பட வேண்டும். ஏனெனில், ஆராய்ச்சி முடிவுகளானது கனித வடிவில் இருக்கும், இது ஆராய்ச்சி அறிக்கைகளை படிக்கும் அனைவருக்கும் புரியும் என கூறமுடியாது. எனவே ஆராய்ச்சியாளர் தான் பெற்ற ஆராய்ச்சி முடிவுகளை ஆராய்ச்சி அறிக்கைகளை படிப்பவர்கள் புரியும் விதத்தில் விளக்கி கூறவேண்டும்.

**(ஔ) ஆராய்ச்சி அறிக்கை தயாரித்தல் (Report Writing)**

ஒரு ஆராய்ச்சியில், மேற்கண்ட அனைத்து செய்ல்முறைகளையும் செய்த பிறகு ஆராய்ச்சியாளர் அந்த ஆராய்ச்சியை முறையாக அறிக்கையாக தயார் செய்து உரிய இடத்தில் வெளியிடவேண்டும். ஆராய்ச்சி அறிக்கைக்கென குறிப்பிட்ட வடிவமைப்புகள் உள்ளன. அவ்வாறான வடிவமைப்பில் ஆராய்ச்சிப்பற்றிய தகவல்களையும் அவற்றின் முடிவுகள் மற்றும் பரிந்துரைகளையும் முறையாக அறிக்கையாக தயார் செய்ய வேண்டும்.

## 1.6. ஆராய்ச்சியின் வகைகள்

ஒரு ஆராய்ச்சியை மேற்கொள்ளும்போது அதன் சிறப்பியல்புகள் அதன் நோக்கம் அதற்கு தேவைப்படும் தகவல்கள் போன்ற காரணிகள் அடிப்படையில் ஏற்கனவே நிலவும் பல்வேறு வகையான ஆராய்ச்சியில் பொருத்தமான ஒரு ஆராய்ச்சி முறையை ஆராய்ச்சியாளர் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். சில வகை ஆராய்ச்சிகள் அறிவியல் சார்ந்த ஆராய்ச்சிகளுக்கு பொருத்தமானதாக அமையும், சில வகை ஆராய்ச்சிகள் சமூக அறிவியல் சார்ந்த ஆராய்ச்சிகளுக்கு பொருத்தமானதாக அமையும். எனவே ஆராய்ச்சியாளர் ஆராய்ச்சி முறையை தேர்ந்தெடுக்கும்போது மிக கவனமாக மற்ற காரணிகளை கவனித்து அதற்கேற்றவாறு ஆராய்ச்சி முறையை தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். ஆராய்ச்சியை கீழ்கண்டவாறு பல்வேறு வகைகளாக பிரிக்கலாம்.

1. தூய ஆராய்ச்சி (Pure Research)
2. பயனுறு ஆராய்ச்சி (Applied Research)
3. வரலாற்று ஆராய்ச்சி (Historical Research)

குறிப்பு

4. எதிர்கால ஆராய்ச்சி (Futuristic Research)
5. பகுப்பாய்வு ஆராய்ச்சி (Analytical Research)
6. ஆய்வு ஆராய்ச்சி (Exploratory Research)
7. விவரிக்கும் ஆராய்ச்சி அல்லது கண்டறியும் ஆராய்ச்சி (Descriptive and Diagnostic Research)
8. நேர்வு ஆய்வு (Cast Study)
9. கூர்நோக்கு ஆராய்ச்சி (Observational Research)
10. கணக்கெடுப்பு ஆராய்ச்சி (Survey Research)
11. காப்பக ஆராய்ச்சி (ArchivalResearch)
12. விளக்கும் ஆராய்ச்சி (Explanatory Research)
13. கருதுகோள் சோதனை ஆராய்ச்சி (Hypothesis-Testing Research)
14. இதர ஆராய்ச்சிகள் (Other Researchs)

மேலே கண்டவாறு பல வகையான ஆராய்ச்சி வகைகள் வழக்கத்தில் உள்ளன. ஆராய்ச்சியாளர் மேற்கண்ட ஆராய்ச்சி முறைகளை பற்றி தெரிந்து வைத்துக்கொள்வதால் அவர் தனக்கு பொருத்தமான ஆராய்ச்சி முறையை தேர்ந்தெடுத்துக்கொள்ள வசதியாக இருக்கும். எனினும் அவர் தனது ஆராய்ச்சியை திறம்பட செய்யவேண்டுமாயின் அவர் எந்த வகை ஆராய்ச்சியை மேற்கொள்ள இருக்கிறாரோ அவ்வகை ஆராய்ச்சி முறையை பற்றி ஆழ்ந்த அறிவு அவசியமாகும். மேற்கண்ட ஆராய்ச்சி முறைகள் அடுத்த அலகில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

## 1.7 சுருக்கம்

இந்த அலகில் நாம் ஆராய்ச்சி என்றால் என்ன என்பதை பார்த்தோம். அதாவது ஆராய்ச்சி என்கிற சொல்லானது அறிவுக்கான தேடல் என்கிற பொருளினை குறிக்கிறது. ஆராய்ச்சி என்பது ஒரு புதிய அறிவாகவோ அல்லது ஏற்கனவே உள்ள அறிவில் புதிய வழியில் கூடுதல் அறிவினை சேர்ப்பதாகவோ இருக்கலாம். ஆராய்ச்சியின் குறிக்கோள்களை விரிவாக பார்த்தோம். மேலும் ஆராய்ச்சியின் நோக்கங்களான விவரித்தல் மற்றும் விளக்குதல், கணித்தல் மற்றும் கட்டுப்படுத்துதல் ஆகியவற்றை பற்றியும் விரிவாக பார்த்தோம். ஆராய்ச்சியின் செயல்முறைகளான ஆராய்ச்சிக்கான தேவையை நியாயப்படுத்துவது (Justifying the need for research), ஆராய்ச்சிக்கான பிரச்சனைகள் மற்றும் குற்க்கோள்கனை வரையறுத்தல் (Define Problems and Objectives), ஆராய்ச்சிக்கான தகவல்களின் தேவை அறிதல் (Identifying data need), தகவல்களின் மூலத்தை கண்டறிதல் (Identifying Sources of Data), பொருத்தமான ஆராய்ச்சி வடிவமைப்பை தேர்ந்தெடுத்தல் (Choosing Research Design), பொருத்தமான தகவல் திரட்டும் முறையை தேர்ந்தெடுத்தல் (Choosing Method of Data Collection), ஆராய்ச்சிக்கான கருவிகளை தேர்ந்தெடுத்தல் அல்லது

வடிவமைத்தல் (Designing or Choosing Research Tools), மாதிரிகளை அடையாளம் காணுதல் (Identifying the Sample), தகவல்களை திரட்டுதல் (Collecting Data), பகுத்தாய்தல் (Analysis), முடிவுகளை விளக்குதல் (Interpretation) மற்றும் ஆராய்ச்சி அறிக்கை தயாரித்தல் (Report Writing) ஆகியவற்றை விரிவாக பார்த்தோம். மேலும் ஆராய்ச்சியின் வகைகள் என்னென்ன என்பதையும் பார்த்தோம்.

குறிப்பு

## 1.8 புரிதலை சோதிக்கும் வினாக்கள்

1. ஆராய்ச்சி என்பதன் பொருளினை விளக்குக.
2. ஆராய்ச்சி என்கிற பதத்தினை வரையறு.
3. ஆராய்ச்சியின் குறிக்கோள்கள் யாவை?
4. ஆராய்ச்சியின் நோக்கங்களை விளக்குக.
5. ஏதேனும் ஐந்து ஆராய்ச்சி முறைகளை எழுதுக.

## 1.9. பயிற்சி வினாக்கள்

ஒரு ஆராய்ச்சியை திறம்பட மேற்கொள்ள ஆராய்ச்சியாளர் மேற்கொள்ள வேண்டிய செயல்முறைகளை விவரி.

## 1.10. மேலும் பயில புத்தகங்கள்

Kothari C.R., Research Methodology – Methods and Techniques, New Age International (P) Limited Publishers, New Delhi, 2004.

Priti R Majhi and Prafull K Khatua Research Methdology (Concepts, Methods, Techniques and SPSS), Himalaya Publishing House, Mumbai, 2015.

# அலகு – 2

# ஆராய்ச்சியின் வகைகள்

குறிப்பு



## 2.1. அறிமுகம்

ஒரு ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சியை மேற்கொள்ளும் முன்னர், தனது ஆராய்ச்சியின் நோக்கம், தன்மை ஆகியவற்றை பொறுத்து தனது ஆராய்ச்சிக்கு பொருத்தமான ஒரு ஆராய்ச்சி முறையை தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு செய்வது எதிர் வரும் காலங்களில் அவ்வாராய்ச்சியாளர் ஆராய்ச்சியை மேற்கொள்ளும்போது எந்த வித குழப்பமும் இல்லாமல் ஆராய்ச்சியை திறமையாகவும் செம்மையாகவும் செய்வதற்கு உறுதுணையாக இருக்கும். நடைமுறையில் பல வகையான ஆராய்ச்சி வகைகள் காணப்படுகின்றன. அவை ஒவ்வொன்றும் தனக்கே உரிதான சிறப்பியல்புகளையும் தன்மைகளையும் கொண்டுள்ளது. மேலும் ஒவ்வொன்றும் ஒன்றோடொன்று வேறுபட்டவையாக இருக்கின்றது. ஆராய்ச்சியாளர் தனக்கு பொருத்தமான ஆராய்ச்சி முறையை தேர்ந்தெடுத்துக்கொள்வதற்கு முன்னர், அவர் தனது ஆராய்ச்சியின் நோக்கம், தன்மை, தேவையான தகவல்கள், தகவல்கள் பெறப்படும் மூலங்கள், பகுப்பாய்வு செய்யப்படும் முறை போன்றவற்றை கருத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும், அதன் பின்னர்

அதற்கேற்றார் போல அவர் தனது ஆராய்ச்சிக்கு பொருத்தமான முறையை தேர்ந்தெடுக்க வேண்டும். இந்த அலகில் பல்வேறு வகையான ஆராய்ச்சி வகைகளை விளக்கமாக காண்போம்.

குறிப்பு

## 2.2. ஆராய்ச்சியின் வகைகள்

கீழ்கணடவாறு பல்வேறு வகையான ஆராய்ச்சி வகைகள் நடைமுறையில் உள்ளன.

1. தூய ஆராய்ச்சி (Pure Research)
2. பயனுறு ஆராய்ச்சி (Applied Research)
3. வரலாற்று ஆராய்ச்சி (Historical Research)
4. எதிர்கால ஆராய்ச்சி (Futuristic Research)
5. பகுப்பாய்வு ஆராய்ச்சி (Analytical Research)
6. ஆய்வு ஆராய்ச்சி (Exploratory Research)
7. விவரிக்கும் ஆராய்ச்சி அல்லது கண்டறியும் ஆராய்ச்சி (Descriptive and Diagnostic Research)
8. நேர்வு ஆய்வு (Cast Study)
9. கூர்நோக்கு ஆராய்ச்சி (Observational Research)
10. கணக்கெடுப்பு ஆராய்ச்சி (Survey Research)
11. காப்பக ஆராய்ச்சி (ArchivalResearch)
12. விளக்கும் ஆராய்ச்சி (Explanatory Research)
13. கருதுகோள் சோதனை ஆராய்ச்சி (Hypothesis-Testing Research)
14. இதர ஆராய்ச்சிகள் (Other Researchs)

### 2.2.1. தூய ஆராய்ச்சி (Pure Research)

தூய அல்லது அடிப்படை ஆராய்ச்சி என்பது, அடிப்படை தத்துவங்களில் கூடுதல் புரிதலை உருவாக்குவதற்காக செய்யப்படுவதாகும். இவ்வகை ஆராய்ச்சியின் முடிவுகள் உடனடியான நடைமுறை பலன்களை அளிப்பதில்லை. அவ்வகை ஆராய்ச்சிகள் அதிக ஆர்வத்தால் ஏற்பட்டு செய்யப்படுவதாகும். ஆனால் நீண்ட காலத்தில் அதிக எண்ணிக்கையிலான வனிக பொருட்களை இவ்வகை ஆராய்ச்சியின் வாயிலாக உற்பத்தி செய்யமுடியும். இது ஏற்கனவே உள்ள அறிவினை விரிவிவாக்குவதற்காக செய்யப்படுகிறது. இது பொதுவாக ஒரு பாடத்தில் ஏற்கனவே உள்ள அடிப்படை அறிவல் கூடுதல் அறிவை சேர்ப்பதற்காக, ஏன்? எப்படி? அல்லது எவ்வாறு? என்கிற கேள்விகளுக்கு பதிலளிப்பதை நோக்கமாக கொண்டு மேற்கொள்ளப்படுகிறது.

### 2.2.2. பயனுறு ஆராய்ச்சி (Applied Research)

குறிப்பு

அடிப்படை ஆராய்ச்சி போல அல்லாமல், பயனுறு ஆராய்ச்சி என்பது ஒரு குறிப்பிட்ட பிரச்சனையை தீர்ப்பதற்காக செய்யப்படுகிறது. இவை ஒரு சமூகம் அல்லது ஒரு நபர் அல்லது ஒரு வியாபார அலகு சார்ந்த பிரச்சனையாக இருக்கலாம். பயனுறு ஆராய்ச்சியில் பெறப்படும் முடிவுதகள் உடனடி நடைமுறை பயனளிக்கிறது எனவே உடனடியாக முடிவுகளை நடைமுறைப்படுத்தமுடிகிறது.

இவ்வகை ஆராய்ச்சிகள், விவசாய உற்பத்தியை பெருக்கும் நோக்கத்துடன் செய்யப்படலாம் அல்லது புதிதாக ஏற்பட்ட ஒரு நோயினை தீர்ப்பதற்காக செய்யப்படலாம் அல்லது நுகர்வோரின் திருப்தியினை மேம்படுத்தி அவர்களை தக்கவைத்துக்கொள்ள மேற்கொள்ளப்படலாம்.

### 2.2.3. வரலாற்று ஆராய்ச்சி (Historical Research)

இது ஒரு தர அடிப்படையிலான ஆராய்ச்சியாகும். இந்த வகை ஆராய்ச்சியானது கடந்த கால நிகழ்வினை புரிந்துகொள்வதற்கு ஏதுவாக விளக்கும் விதமாக செய்யப்படுகிறது. இதன் முக்கியமான நோக்கமானது, கடந்தகால நபர் அல்லது நிகழ்வினனை பற்றி நுண்ணறிதலும் அதன் முடிவினை எழுதுவதாகும். வரலாற்று ஆராய்ச்சியானது ஒரு கடந்த கால நிகழ்வின் பொருளினை அதன் உண்மையை விளக்கி அது எதிர்கால நிகழ்வினை எவ்வாறு பாதிக்கிறது என்பதை கண்டறியும் விதமாகவும் படிக்கப்படுகிறது. பொதுவாக இவ்வகை ஆராய்ச்சி, ஒரு தனி நபர், சமூக பிரச்சனை ஆகியவற்றின் மீது கவனம் செலுத்தி அவற்றின் பழைய மற்றும் புதியவனவற்றுடன் தொடர்பை படிக்கிறது. சில வரலாற்று ஆராய்ச்சிகள் முன்னர் செய்யப்பட்ட வரலாற்று ஆய்வுகளுக்கு புரிதலை ஏற்படுத்துவதற்காக அல்லது புதிய விளக்கத்தை தருவதற்காக மறுவிளக்கம் செய்வதாக இருக்கிறது.

### 2.2.4. எதிர்கால ஆராய்ச்சி (Futuristic Research)

எதிர்கால ஆராய்ச்சி என்பது சாத்தியமான எதிர்கால நிகழ்வுகளின் முறையான ஒரு ஆராய்ச்சியாகும். எதிர்கால ஆராய்ச்சியானது கனித்தலிலிருந்து வேறுபடுகிறது. இது சமூக அல்லது தொழில்நுட்ப மேம்பாடுகளுக்காக அல்லது மற்ற சூழ்நிலைகளின் போக்கினை படிப்பதற்காக செய்யப்படுகிறது. இவ்வகை ஆராய்ச்சியானது சமூக அறிவியல் ஆராய்ச்சியின் ஒரு கிளையாக பார்க்கப்படுகிறது குறிப்பாக, வராற்று ஆய்வுகளுக்கு அதிகமாக பயன்படுத்தப்படுகிறது.

குறிப்பு

## 2.2.5. பகுப்பாய்வு ஆராய்ச்சி (Analytical Research)

பகுப்பாய்வு ஆராய்ச்சியானது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாறிலிகளுக்கிடையேயான காரணம் மற்றும் தாக்கம் தொடர்பான உறவினை படிப்பதாக உள்ளது. பகுப்பாய்வு ஆராய்ச்சியானது விவரிக்கும் ஆராய்ச்சியிலிருந்து வேறுபடுகிறது. விவரிக்கும் ஆராய்ச்சியானது உண்மையை கண்டறிய மேற்கொள்ளப்படும் ஒரு ஆராய்ச்சியாகும். இது நடப்பில் உள்ள ஒரு நபர் அல்லது ஒரு சூழல் அல்லது ஒரு குழுவின் சிறப்பியல்புகளை விவரிப்பதாகும். மாறிலிகளின் மீது ஆராய்ச்சிக்கு எந்தவித கட்டுப்பாடும் இல்லை, ஆராய்ச்சியாளர் உண்மையான நிலவரத்தை அறிவிக்க வேண்டும். மற்றொரு புறம், பகுப்பாய்வு ஆராய்ச்சியானது, கிடைக்கப்பெறும் தகவல்களைகொண்டு மேற்கொள்ளப்படும் ஒரு முக்கியமாக மேற்கொள்ளப்படும் மதிப்பீடாகும். இதில் முக்கியமாக கருதுகோள் சோதனை செய்து மாறிலிகளின் உறவினை விவரிப்பதாகும்.

## 2.2.6. ஆய்வு ஆராய்ச்சி (Exploratory Research)

இவ்வகை ஆராய்ச்சிகள் சூத்திர ஆராய்ச்சி எனவும் அழைக்கப்படுகிறது. இவ்வகை ஆராய்ச்சியின் முக்கிய நோக்கமானது, ஒரு பிரச்சனையை வகுத்தல் அல்லது துல்லியமான சோதனை செய்ய ஆராய்ச்சி தலைப்புகளை வகுத்தல் அல்லது செயல்பாட்டு பார்வையில் ஒரு கருதுகோளை உருவாக்கி ஆய்தல். இவ்வகை ஆராய்ச்சியில் ஆராய்ச்சியாளர் தான் கண்டறிந்த புதிய யோசனைகளை வலியுறுத்தி அதை நுட்பமாக விளக்கவும் செய்கிறார். இந்த ஆராய்ச்சியில் பிரச்சனையின் பல்வேறு அம்சங்களை ஆராயும் விதமாக ஆராய்ச்சி வடிவமைப்பானது நெகிழ்வுத்தன்மையுடன் தேர்வுசெய்யப்படுகிறது. இதில் ஆரம்பத்தில் ஆராய்ச்சிக்கான பிரச்சனையானது மிக பரவலாக வரையறுக்கப்படுகிறது, பின்னர் அது மிகுந்த துல்லியமான பொருளாக உருமாற்றம் செய்யப்படுகிறது. இந்த வகை ஆராய்ச்சியில் பின்வரும் மூன்று வகையான ஆராய்ச்சி வடிவமைப்புகள் கருத்தில் கொள்ளப்படுகிறது.

(அ) மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சி தொடர்பான முன்னர் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளை பற்றி இலக்கிய விமர்சனம் செய்தல்.

(ஆ) அனுபவ கணக்கெடுப்பு

(இ) 'நுண்ணறிவை தூண்டும்' உதாரணங்களுக்கான பகுப்பாய்வு

### 2.2.7. விவரிக்கும் ஆராய்ச்சி அல்லது கண்டறியும் ஆராய்ச்சி (Descriptive and Diagnostic Research)



ஒரு குறிப்பிட்ட நபர் அல்லது ஒரு குறிப்பிட்ட குழுவை பற்றிய சிறப்பியல்புகளை விவரிக்கும் வகையிலான ஆராய்ச்சி விவரிக்கும் ஆராய்ச்சி என அழைக்கப்படுகிறது. அதேசமயம் கண்டறியும் ஆராய்ச்சியானது, ஏதோ ஒன்றுடன் தொடர்புடைய அல்லது ஏதோ நடக்கப்போவதன் அதிர்வெண்னை பற்றி படிக்கிறது. சில இணையான மாறிலிகள் பற்றிய ஆராய்ச்சிகள் கண்டறியும் ஆராய்ச்சிக்கான உதாரணங்களாகும். முாறாக, ஒரு நபர் அல்லது ஒரு குழுவின் உண்மைகள் மற்றும் அவற்றின் சிறப்பியல்புகளை கணித்து விவரிப்பது விவரிக்கும் ஆராய்ச்சிக்கான உதாரணங்களாகும்.

ஆராய்ச்சிக்கான வடிவமைப்பை மேற்கொள்ளும்போது, விவரிக்கும் அல்லது கண்டறியும் ஆராய்ச்சி வகைகளுக்கு ஒரே மாதிரியான வடிவமைப்பை மேற்கொள்ளலாம். இந்த இரண்டு வகை ஆராய்ச்சியிலும் ஆராய்ச்சியாளர் ஆராய்ச்சி பிரச்சனைகளை தெளிவாக வரையறுக்க வேண்டும். மேலும் அவர் எதை அளவிடப்போகிறார் மற்றும் அவற்றை அளவிட போதுமான முறைகளை கண்டறிய வேண்டும். இதில் மக்கள்தொகை என்பதை தெளிவாக வரையறுக்க வேண்டும். ஏனெனில், இவ்வகை ஆராய்ச்சியல் முழுமையான ஆராய்ச்சி நோக்கம் மற்றும் துல்லியமான தகவல்கள் பெறப்படுகிறது. ஆராய்ச்சிக்கான வழிமுறைகள் மிக கவனமாக மேற்கொள்ளப்படவேண்டும். அவ்வாறு மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சி வடிவமைப்பானது, ஆராய்ச்சியினை ஒரு சார்புத்தன்மையிலிருந்து பாதுகாப்பதாகவும் அதிகபட்ச நம்பகத்தன்மை கொண்டதாகவும் இருக்க வேண்டும்.

இவ்வகை ஆராய்ச்சிக்கான ஆராய்ச்சி வடிவமைப்பானது நிலையானதாக இருக்கவேண்டுமே தவிர நெகிழ்வுத்தன்மை கொண்டதாக இருக்கக் கூடாது. அது கீழ்கண்ட அம்சங்களை உள்ளடக்கியதாக இருத்தல் அவசியம்.

- ஆராய்ச்சி குற்க்கோள்களை வகுத்தல்.
- தகவல் கேரிப்பின் முறையை வடிவமைத்தல்.
- மாதிரி அளவினை தேர்ந்தெடுத்தல்.
- தகவல் சேகரித்தல்.
- சேகரிக்கப்பட்ட தகவல்களை செயல்முறைப்படுத்துதல் மற்றும் பகுப்பாய்வு செய்தல்.
- ஆராய்ச்சி முடிவுகளை அறிக்கையாக தயாரித்தல்.

### 2.2.8. நேர்வு ஆய்வு (Cast Study)

இவ்வகை ஆராய்ச்சியில் ஒரு நபர் அல்லது ஒரு அலகு அல்லது நிகழ்வு அல்லது வரையறுக்கப்பட்ட வெகு சில நபர் அல்லது அலகு அல்லது நிகழ்வுகளை பற்றி ஆழமாக மற்றும் விளக்கமாக ஆராய்ச்சி செய்வதாகும். இவ்வகை ஆராய்ச்சியில் உள்ள மிகப்பெரிய பிரச்சனையானது புறநிலையாகும் (objectivity).

### 2.2.9. கூர்நோக்கு ஆராய்ச்சி (Observational Research)

இவ்வகை ஆராய்ச்சியானது ஒரு நபர் அல்லது ஒரு குழுவின் இயற்கையான சூழலில் அவர்களின் நடத்தையின் தொகுப்பாகும். இது கள ஆராய்ச்சி (Field Research) எனவும் அழைக்கப்படுகிறது. இது ஆராய்ச்சி மேற்கொள்ளப்படும் நபர்களை இயற்கையாக நடைபெறும் சூழலில் ஆராய்வதாகும். இது சந்தை பற்றிய விவரங்களை பெறுவதற்காக மேற்கொள்ளப்படும் ஒரு ஆராய்ச்சியாகும். ஊதாரணமாக ஒரு உணவு விடுதியில் நுகர்வோர்களை சந்தித்து உணவு விடுதி மற்றும் உணவு ஆகியவற்றின் தரம் போன்றவற்றைப்பற்றி அவர்களை கவனித்து ஆராய்வதாகும்.

### 2.2.10. கணக்கெடுப்பு ஆராய்ச்சி (Survey Research)

கணக்கெடுப்பு ஆராய்ச்சி என்பது ஆராய்ச்சி மேற்கொள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட மாதிரிகளிடமிருந்து வினா பட்டியல் வாயிலாக அவர்களிடமிருந்து பதிலை பெற்று செய்வதாகும். இவ்வாறு பெறப்படும் தகவலானது, காகிதம் அல்லது தொலைபேசி அல்லது இணையம் ஆகியவற்றின் வாயிலாகப் பெறப்படலாம். இவ்வகையில் பெறப்படும் தகவல்கள் முதன்மைத் தகவல் என்று அழைக்கப்படுகிறது. இவ்வாறு பெறப்பட்ட தகவல்கள் வேறு ஆராய்ச்சியாளர்களுக்கு தேவைப்படும்பட்சத்தில் இரண்டாம் நிலை தகவல்களாக அளிக்கப்படலாம். இந்த வகை ஆராய்ச்சியானது தேர்ந்தெடுக்கப்பட்ட நபர்களின் குழுவிடமிருந்து அவர்களது கருத்துகள், நம்பிக்கைகள் மற்றும் உணர்வுகள் ஆகியவற்றை பெறுவதாக இருக்கலாம். பொதுவாக இதில், மாதிரிகள் மக்கள்தொகை மாதிரிகளாக உள்ளன. இதில் அவர்களது வயது, பாலினம், வருமானம் போன்ற தகவல்களை திரட்டப்படுவதாக உள்ளது. இவ்வாறு மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சியில் தேர்ந்தெடுக்கப்படும் மாதிரிகள் ஆராய்ச்சி மக்கள்தொகையின் பிரதிநிதிகளாக கொள்ளப்பட்டு அவ்வாராய்ச்சியின் முடிவுகள் பொதுமையாக்கப்படுகிறது. இதில் தொகுக்கப்படும் தகவல்களை சில கேள்விகளோடு தொடர்புபடுத்தி ஆராயலாம்.

### 2.2.11. காப்பக ஆராய்ச்சி (ArchivalResearch)

குறிப்பு

இவ்வகை ஆராய்ச்சியானது, ஏற்கனவே உள்ள தகவல்கள் அல்லது பதிவுகளை பகுப்பாய்வு செய்வதாகும். இது அத்தகவல் அல்லது பதிவுகளின் தரத்தன்மையின் உள்ளடக்க பகுப்பாய்வு செய்வதற்காக ஈடுபடுத்தப்படுகிறது. உதாரணமாக 1950 முதல் 2000 ஆண்டு வரையில் இந்தியாவில் வரலாற்றில் குறிப்பிடப்பட்ட பெண்கள் மற்றும் குழந்தைகளை பற்றிய நிகழ்வின் அதிர்வெண்ணை (frequency) ஆராயலாம்.

### 2.2.12. விளக்கும் ஆராய்ச்சி (Explanatory Research)

விளக்கும் ஆராய்ச்சியானது சில நிகழ்வுகள் பற்றிய காரணங்கள் அல்லது ஏன் என்கிற கேள்விகளுக்கு விடையளிக்கும் விதமாக செய்யப்படும் ஆராய்ச்சியாகும். இது ஒப்புமைப்படுத்துவதாகவோ அல்லது மாற்றம் ஏற்படுத்தும் காரணங்களை ஆராய்வதவாகவோ இருக்காது. இது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாறிலிகளுக்கு இடையேயான காரணம் மற்றும் பாதிப்பு பற்றி ஆராய்வதை நோக்கமாக கொன்டுள்ளது. இவ்வகை ஆராய்ச்சிகள் நிகழ்வுகதளின் இயற்கையாக அமையும் வரிசையை பொருத்தமான படிநிலைகளை நிறுவ முயல்கிறது மற்றும் மாறிலிகளின் மீது காரணம் மற்றும் பாதிப்பில் ஏற்படும் மாற்றங்களை கூறுகிறது. மேலும் இது அதன் பாதிப்புகளை விளக்குகிறது. உதாரணமாக ‘பெண்களுக்கு எதிரான வன்முறை’ என்கிற தலைப்பில் ஆராய்ச்சி மேற்கொள்ளப்படுகிறது எனில், இது பெண்களுக்கு எதிரான கடத்தல்கள், கன்கொடுமை, கொலைகள், வரதட்சனை கொடுமை போன்றவற்றை மட்டும் படிக்காமல் ஆண்கள் ஏன் பென்கள் மீது வன்முறையை மேற்கொள்கின்றனா் என்பதையும் ஆராய்கிறது.

விளக்கும் ஆராய்ச்சியில் நிறுவப்படும் கருதுகோள்களானது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாறிலிகளுக்கிடையேயான உறவினை வெளிப்படுத்தும் விதமாக வடிவமைக்கப்படுகிறது. அதாவது மாறிலி A மற்றும் B ஆகியவற்றுக்கிடையே உறவு உள்ளது என்பதை மட்டும் இந்த கதுதுகோள்கள் வெளிப்படுத்துவதில்லை, மேலும் மாறிலி A ஆனது மாறிலி B மீது தாக்கத்தை ஏற்படுத்துகிறது என்பதையும் வெளிப்படுத்தும் விதமாக அமைகிறது. வேறு விதமாக கூறுவதாயின் மாறிலி B ஆனது மாறிலி A யினால் தாக்கமடைகிறது என்பதை கூறுகிறது. விளக்கும் ஆராய்ச்சியில் வடிவமைக்கப்படும் ஆராய்ச்சி வடிவமைப்பானது, மாறிலிகளுக்கிடையேயான உறவில் ஏன் என்கிற கேள்விக்கு பதிலளிக்கும் விதமாக அமைக்கப்படுகிறது. உதாரணமாக ஒரு நாட்டில் விளைவிக்கப்படும் விவசார பொருள் உற்பத்திக்கும் அந்நாட்டு பொருளாதார வளர்ச்சிக்கும் உறவு உள்ளதா என்பதை மட்டும் காணும் விதமாக இல்லாமல் அவ்வாறு உறவு இருந்தால் அது ஏன்

என்கிற கேள்விக்கு பதிலளிக்கும் வகையில் இவ்வகை ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்படுகிறது.



## 2.2.13. கருதுகோள் சோதனை ஆராய்ச்சி (Hypothesis-Testing Research)

கருதுகோள் சோதனை ஆராய்ச்சி என்பது ருசுக்கமாக சோதனை செய்யும் ஆராய்ச்சி (Experimental Studies) எனவும் அழைக்கப்படுகிறது. ஒரு ஆராய்ச்சியாளர் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாறிலிகளுக்கிடையேயான தற்செயலாக உள்ள உறவுகளுக்கு கருதுகோள்கள் வடிவமைத்து அவற்றை சோதனை செய்யும் விதமாக ஆராய்ச்சி மேற்கொண்டால் அது கருதுகோள் சோதனை ஆராய்ச்சி என்று அழைக்கப்படுகிறது. இவ்வகையான ஆராய்ச்சியில் தேவைப்படும் செயல்முறையானது, சார்புத்தன்மையை குறைப்பது மற்றும் ஆராய்ச்சி முடிவுகளின் நம்பகத்தன்மையை அதிகரிப்பது மட்டுமல்லாமல் ஒரு மாறிலி மற்றொரு மாறிலி மீது ஏற்படுத்தும் தாக்கத்தினை விளக்கி எழுதுவதற்கு அனுமதிப்பதாக இருக்க வேண்டும். வழக்கமாக சோதனைகள் இந்த தேவைகளை எதிர்கொள்கின்றன. எனவே, இவ்வகை ஆராய்ச்சிகளில் ஆராய்ச்சி வடிவமைப்பு பேசப்படும்போது, நாம் சோதனைக்கான வடிவமைப்பையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

ஆரம்பத்தில் பேராசிரியர் ∴பிஷ்ஷர் என்பவர் சோதனை வடிவமைப்பில் இணைந்திருந்தார். இந்த வகை ஆராய்ச்சியை மேற்கொண்ட காலகட்டத்தில் அவர் இங்கிலாந்தில் ரோதாம்ஸ்டெட் சோதனை நிலையத்தில் (ஒரு விவசாய ஆராய்ச்சிக்கான நிலையம்) வேலைபார்த்து வந்தார். இச்சோதனை ஆராய்ச்சியானது விவசாய உற்பத்தி தொடர்பான ஆராய்ச்சியில் உருவானதாகும். அவர் அவ்வாராய்ச்சியில் விவசாய நிலங்களை பல்வேறு தொகுதிகளாக பிரித்து பிறகு அவற்றில் தனித்தனியே சோதனைகளை மேற்கொள்ளும்போது விடைத்த முடிவுகளானது மிகுந்த நம்பத்தன்மை கொண்டதாக அமைந்தது. இந்த காரணியானது அவரை இவ்வகை ஆராய்ச்சியை உருவாக்க மிகுந்த ஆர்வமூட்டியது. எனவே அவர் அறிவியலில் மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சியில் கருதுகோள்களை உருவாக்கி அவற்றை சோதனை செய்து முடிவுகள் எட்டப்படும் வகையில் இவ்வகை ஆராய்ச்சி முறையை மேம்படுத்தினார். ஆரம்பத்தில் இவ்வகை ஆராய்ச்சிகள் அறிவியல் பாடங்களில் மேற்கொள்ளப்பட்டாலும் காலப்போக்கில் இவ்வகை ஆராய்ச்சியானது அனைத்து வகை பாடங்களிலும் ஏற்றவகையில் செய்யப்பட வடிவமைத்து செய்யப்பட்டு வருகிறது.

**கருதுகோள் சோதனை ஆராய்ச்சியில் அடிப்படை கொள்கைகள்**

பேராசிரியர் ∴பிஷ்ஷர் கருதுகோள் சோதனை ஆராய்ச்சியை மேற்கொள்ள கீழ்காணும் மூன்று அடிப்படை கொள்கைகளை வகுத்துள்ளார்.

- பிரதிசெய்கை கொள்கை. (Principle of Replication)
- சீறற்றப்படுத்துதல் கொள்கை (Principle of Randomization)
- உள் கட்டுப்பாட்டு கொள்கை (Principle of Local Control)

**பிரதிசெய்கை கொள்கை. (Principle of Replication)**

இந்த கொள்கையின்படி, ஆராய்ச்சியில் மேற்கொள்ளப்படும் சோதனையானது ஒன்றுக்கும் மேற்பட்ட முறை மேற்கொள்ளப்பட வேண்டும். அதே போல, ஒவ்வொரு பரிசோதனையும் ஒன்றுக்கும் மேற்பட்ட சோதனை அலகுகளில் விண்ணப்ப்பிக்க வேண்டும். அவ்வாறு செய்யும்போது சோதனைகள் மீதான புள்ளியல் முடிவுகள் மிக துல்லியமாக இருக்கும். உதாரணமாக, இரண்டு வகையான நெல் உற்பத்தியை படிக்கும்போது, நாம் அந்த நிலத்தை இரண்டாக பிரித்து, ஒன்றில் ஒரு வகையான நெல்லையும் மற்றொரு பகுதியில் மற்றொரு வகையான நெல்லையும் உற்பத்தி செய்யலாம். பின்னர் அந்த இரண்டு வகையான நெல் உற்பத்திகளையும் ஒப்பிட்டு ஆராய்ச்சி முடிவுகளை எழுதலாம். நாம் பரதிசெய்கை கொள்கைபடி ஆராய்ச்சி செய்ய வேண்டுமெனில், அந்த நிலத்தினை பலவேறு பகுதிகளாக பிரிக்க வேண்டும், அவ்வாறு பிரிக்கப்பட்ட பகுதிகளில் சரிபாதி பகுதிகளில் ஒரு நெல் வகையையும் மீதமுள்ள பகுதிகளில் மற்றொரு நெல் வகையையும் விளைவிக்கலாம், இவ்வாறு செய்து ஆராய்ச்சி முடிவுகளை பெறும்போது, முந்தய முறையைவிட ஆராய்ச்சி முடிவில் நம்பகத்தன்மை அதிகமாக இருக்கும். அவ்வாறான மொத்த சோதனையும் திரும்பத் திரும்ப செய்யும்போது நாம் இன்னமும் நம்பகத்தன்மையுடைய ஆராய்ச்சி முடிவுகளை பெற முடியும்.

**சீறற்றப்படுத்துதல் கொள்கை (Principle of Randomization)**

சீறற்றப்படுத்துதல் கொள்கை என்பது ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சியை வடிவமைக்கும்போதோ அல்லது திட்டமிடும்போது, அந்த சோதனையானது புறம்பான (extraneous) காரணிகளால் ஏற்படும் தாக்கத்தின் மாறுபாடுகளை படிக்கும் விதமாக இருத்தல் வேண்டும். இவற்றை "வாய்ப்பு" என்கிற ஒரு பொதுவான தலைப்பில் இவற்றை ஒருங்கினைக்கலாம். மேற்கண்ட உதாரணத்தின்படி நாம் ஒரு நிலத்தை இரண்டாக பிரித்து ஒரு பாதியில் ஒரு நெல் வகையையும் மற்றொரு பாதியில் மற்றொரு நெல் வகையையும் விளைவிக்கலாம், எனினும் அந்த இரண்டு பாதி நிலத்தின் மண்ணின் வளம் மாறுபடலாம், இச்சூழலில் நாம் பெறும் ஆராய்ச்சி முடிவானது அவ்வளவு நம்பகத்தன்மையுடன் இருக்க வாய்ப்பில்லை. எனவே அந்த நிலத்தினை பிரிக்கும்போது நாம் சீறற்றமுறையில் தேர்ந்தெடுக்கும்போது இந்த பிரச்சனையை நாம்

சரிசெய்ய முடியும். இவ்வாறு நிலத்தை சரி பாதியாக பிரிக்காமல் சீறற்ற முறையில் நெல் வகை விளைச்சலுக்கான நிலப்பகுதியை தேர்ந்தெடுத்தலுக்கு சீறற்றப்படுத்துதல் கொள்கை எனப்படுகிறது.

குறிப்பு

### உள் கட்டுப்பாட்டு கொள்கை (Principle of Local Control)

சோதனை ஆராய்ச்சி முறையில் இதுவும் ஒரு முக்கியமான கொள்கையாகும். உள் கட்டுப்பாட்டுக் கொள்கை என்பது நாம் சோதனை செய்யும் மாறிலியை தவிர ஏனைய அனைத்து மாறிலிகளையும் கட்டுப்படுத்துவதாகும். வேறுவகையில் கூறுவதாயின், இந்த கொள்கையின்படி, களத்தினை முதலில் பல்வேறு ஒரேவிதமான பகுதிகளாக பிரிக்கவேண்டும், இது தொகுதி என்று அழைக்கப்படுகிறது, பின்னர் ஒவ்வொரு தொகுதியையும் சோதனைசெய்யும் விதமாக பல்வேறு சமமான பகுதிகளாக பிரிக்கவேண்டும். பின்னர் அந்த தொகுதிகளுக்கு சோதனை விதத்தை சீறற்ற முறையில் செய்ய வேண்டும். இவ்வாறு களத்தினை பல்வேறு பகுதிகளாக பிரிப்பதை “பிரித்தல்” எனலாம். பொதுவாக தொகுதி என்பது நாம் கொண்டிருக்கும் புறம்பான காரணிகளை நிறுவும் நிலைகளாகும். எனவே, நாம் இருவழி மாறிலிகளின் பகுப்பாய்வை (Two way ANOVA) செய்து மொத்த மாற்றங்களில் இதன் பங்களிப்பினை அளவிட முடியும். சுருக்கமாக கூறுவதாயின், இந்த கொள்கையினை நாம் பயன்படுத்தும்போது நாம் புறம்பான காரணிகளால் ஏற்படும் மாற்றங்களை சோதனை பிழைகள் மூலம் நீக்க முடிகிறது.

## 2.2.14. இதர ஆராய்ச்சி வகைகள் (Other Types of Research)

ஆராய்ச்சியை மேற்கொள்வதில் உள்ள முக்கியமான முறைகளை நாம் மேலே உள்ள பத்திகளில் மிக விரிவாக பார்த்தோம். மேற்கண்ட முறைகள் அல்லாமல், வேறு சில ஆராய்ச்சி முறைகளும் நடைமுறையில் உள்ளன. அவற்றை இப்பகுதியில் நாம் சுருக்கமாக காண்போம்.

### நடவடிக்கை ஆராய்ச்சி (Action Research)

அடிப்படையில் இவ்வகை ஆராய்ச்சி ஒரு நடைமுறை பயன்பாட்டு (applied) ஆராய்ச்சி முறையாகும். இவ்வகை ஆராய்ச்சியில் ஒரு பிரச்சனை தொடர்பாக நேரடியாக நடவடிக்கை மேற்கொள்ளும் பொருட்டு ஆராய்ச்சி முடிவுகளை நடைமுறைக்கு ஏற்றவாறு தீர்வு காணும் விதத்தில் முடிவுகள் எட்டப்படுகின்றன.

### மதிப்பீட்டு ஆராய்ச்சி (Evaluation Research)

பொதுவாக வணிகவியல் அல்லது வணிக நிர்வாகவியல் ஆராய்ச்சியாளர்கள் ஒரு பிரச்சனை தொடர்பாக ஆராய்ச்சி மேற்கொண்டு

குறிப்பு

அதன் முடிவுகளை பயன்படுத்தி கொள்கைகள், திட்டமிடல் மற்றும் நிகழ்ச்சி நிரல் ஆகியவற்றை நடைமுறைபடுத்துவதற்காக செய்யப்படும் ஆராய்ச்சியானது மதிப்பீட்டு ஆராய்ச்சி என்று அழைக்கப்படுகிறது. இவ்வகை ஆராய்ச்சியில் மதிப்பீடு என்கிற அம்சமானது பயனுறு ஆராய்ச்சியாக இருத்தல் அவசியம். இவ்வகை ஆராய்ச்சியில் ஆராய்ச்சியாளர் நடைமுறைப்படுத்தப்பட்ட கொள்கைகளின் விளைவுகளை ஆராயும் விதமாக மேற்கொள்ளப்படுகிறது. உதாரணமாக, ஒரு வியாபார நிறுவனமானது, தங்கள் நிறுவனத்தில் பனியாற்றும் பனியாளர்களின் மன உறுதி மற்றும் அவர்களின் வேலை செய்யும் திறனை மேம்படுத்தும் விதமாக அவர்களுக்கு நல திட்டம் ஒன்றை அறிமுகபடுத்தி நடைமுறைப்படுத்தியுள்ளது. பின்னர் ஆராய்ச்சியாளர் அந்த திட்டத்தின் தாக்கத்தினை, அதாவது நிறுவனத்தின் கொள்கையின் தாக்கத்தினை சோதனை செய்யும் விதமாக ஆராய்ச்சி மேற்கொள்ளலாம்.

### முடிவு சார்ந்த ஆராய்ச்சி (Conclusion Oriented Research)

பயனுறு ஆராய்ச்சி என்பது, ஒரு நடைமுறை பிரச்சனையில் தீர்வு மேற்கொள்வதற்காகவும் முடிவுகளெடுப்பதற்கு உதவி புரிவதற்காகவும் மேற்கொள்ளப்படுகிறது. ஆனால் முடிவு சார்ந்த ஆராய்ச்சியில், ஆராய்ச்சியாளர்கள் ஆய்வு பிரச்சனை, விசாரனையை மறு வடிவமைப்பு செய்தல் போன்றவற்றில் அவர் விப்பம் போல தேர்ந்தெடுத்துக்கொள்ள அல்லது வடிவமைத்துக்கொள்ள சுதந்திரமளிக்கப்படுகின்றனர். இவ்வகை ஆராய்ச்சிகள் முடிவுகளை மேற்கொள்வோர்களுக்காக செய்யப்படுகிறது. முடிவு சார்ந்த ஆராய்ச்சியில் ஆராய்ச்சியாளர்கள் தங்கள் சார்ந்த வகையில் ஆராய்ச்சியை மேற்கொள்ள முடியாது. செயல்பாட்டு ஆராய்ச்சி (Operations research) இவ்வகை ஆராய்ச்சிக்கு ஒரு சிறந்த உதாரணமாகும். இவ்வகை ஆராய்ச்சியில் தாங்கள் மேற்கொண்டுள்ள செயல்பாடு தொடர்பான முடிவுகளை எடுப்பதற்காக இந்த வகை ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

### பல துறை ஆராய்ச்சி (Inter-Disciplinary Research)

பல துறை ஆராய்ச்சி என்பது ஒரு தனி நபர் அல்லது ஒரு குழுவினரால், தகவல்கள், தரவுகள், தொழில்நுட்பங்கள், கருவிகள், முன்னோக்குகள், கருத்துகள் மற்றும் கோட்பாடுகள் ஆகியவற்றை ஒன்றுக்கும் மேற்பட்ட பாடங்களிலிருந்து ஒருங்கினைத்து மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சியாகும். இவ்வகை ஆராய்ச்சியானது பாடத்தில் உள்ள அடிப்படை புரிதல்களை மேம்படுத்தும் விதமாகவும் அல்லது ஒரு பிரச்சனையை தீர்க்கும் விதமாக அதற்கு முடிவுகளை எட்டும் விதமாகவும் மேற்கொள்ளப்படுகிறது.

## 2.3 சுருக்கம்

குறிப்பு

இந்த பாடத்தில் நாம் பலவகையான ஆராய்ச்சிகளை விளக்கமாக பார்த்தோம். தூய அல்லது அடிப்படை ஆராய்ச்சி என்பது, அடிப்படை தத்துவங்களில் கூடுதல் புரிதலை உருவாக்குவதற்காக செய்யப்படுவதாகும். பயனுறு ஆராய்ச்சி என்பது ஒரு குறிப்பிட்ட பிரச்சனையை தீர்ப்பதற்காக செய்யப்படுகிறது. வரலாற்று ஆராய்ச்சியானது கடந்த கால நிகழ்வினை புரிந்துகொள்வதற்கு ஏதுவாக விளக்கும் விதமாக செய்யப்படுகிறது. எதிர்கால ஆராய்ச்சி என்பது சாத்தியமான எதிர்கால நிகழ்வுகளின் முறையான ஒரு ஆராய்ச்சியாகும். பகுப்பாய்வு ஆராய்ச்சியானது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாறிலிகளுக்கிடையேயான காரணம் மற்றும் தாக்கம் தொடர்பான உறவினை படிப்பதாக உள்ளது. இவ்வகை ஆராய்ச்சிகள் சூத்திர ஆராய்ச்சி எனவும் அழைக்கப்படுகிறது. இவ்வகை ஆராய்ச்சியின் முக்கிய நோக்கமானது, ஒரு பிரச்சனையை வகுத்தல் அல்லது துல்லியமான சோதனை செய்ய ஆராய்ச்சி தலைப்புகளை வகுத்தல் அல்லது செயல்பாட்டு பார்வையில் ஒரு கருதுகோளை உருவாக்கி ஆய்தல். ஒரு குறிப்பிட்ட நபர் அல்லது ஒரு குறிப்பிட்ட குழுவை பற்றிய சிறப்பியல்புகளை விவரிக்கும் வகையிலான ஆராய்ச்சி விவரிக்கும் ஆராய்ச்சி என அழைக்கப்படுகிறது. அதேசமயம் கண்டறியும் ஆராய்ச்சியானது, ஏதோ ஒன்றுடன் தொடர்புடைய அல்லது ஏதோ நடக்கப்போவதன் அதிர்வெண்ணை பற்றி படிக்கிறது. இவ்வகை ஆராய்ச்சியில் ஒரு நபர் அல்லது ஒரு அலகு அல்லது நிகழ்வு அல்லது வரையறுக்கப்பட்ட வெகு சில நபர் அல்லது அலகு அல்லது நிகழ்வுகளை பற்றி ஆழமாக மற்றும் விளக்கமாக ஆராய்ச்சி செய்வதாகும். இவ்வகை ஆராய்ச்சியானது ஒரு நபர் அல்லது ஒரு குழுவின் இயற்கையான சூழலில் அவர்களின் நடத்தையின் தொகுப்பாகும். கணக்கெடுப்பு ஆராய்ச்சி என்பது ஆராய்ச்சி மேற்கொள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட மாதிரிகளிடமிருந்து வினா பட்டியல் வாயிலாக அவர்களிடமிருந்து பதிலை பெற்று செய்வதாகும். இவ்வகை ஆராய்ச்சியானது, ஏற்கனவே உள்ள தகவல்கள் அல்லது பதிவுகளை பகுப்பாய்வு செய்வதாகும். ஒரு ஆராய்ச்சியாளர் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாறிலிகளுக்கிடையேயான தற்செயலாக உள்ள உறவுகளுக்கு கருதுகோள்கள் வடிவமைத்து அவற்றை சோதனை செய்யும் விதமாக ஆராய்ச்சி மேற்கொண்டால் அது கருதுகோள் சோதனை ஆராய்ச்சி என்று அழைக்கப்படுகிறது.

## 2.4 புரிதலை சோதிக்கும் வினாக்கள்

1. தூய (Pure Research) ஆராய்ச்சி என்பதன் பொருளினை கூறுக.
2. பகுப்பாய்வு ஆராய்ச்சி (Analytical Research) என்றால் என்ன?

3. ஆய்வு ஆராய்ச்சி (Exploratory Research) என்றால் என்ன?
4. விவரிக்கும் ஆராய்ச்சி (Descrptive Research) என்பதன் பொருளினை விளக்குக.



5. கணக்கெடுப்பு ஆராய்ச்சியின் (Survey Research) சிறப்பியல்புகளை கூறுக.
6. கருதுகோள் ஆராய்ச்சியின் (Hypotheses Testing Research) அடிப்படை கொள்கைகளை விளக்குக.
7. முடிவு சார்ந்த ஆராய்ச்சி என்றால் என்ன?
8. பலதுறை ஆராய்ச்சி என்பதன் பொருளினை விளக்குக.

## 2.5. பயிற்சி வினாக்கள்

1. நேர்வு ஆராய்ச்சி என்பதன் பொருளினை விளக்கி, அவ்வாராய்ச்சிக்கான ஒரு உதாரணத்தை விவாதி.
2. கருதுகோள் சோதனை ஆராய்ச்சி (Hypotheses Testing Research) என்பதன் பொருள் யாது? ஆவ்வகை ஆராய்ச்சிக்கு ஒரு கற்பனையான கருதுகோளினை வடிவமைத்து அதை எவ்வாறு சோதனை செய்வாய் என்பதை விவாதி.

## 2.6. மேலும் பயில புத்தகங்கள்

Kothari C.R., Research Methodology – Methods and Techniques, New Age International (P) Limited Publishers, New Delhi, 2004.

Priti R Majhi and Prafull K Khatua Research Methdology (Concepts, Methods, Techniques and SPSS), Himalaya Publishing House, Mumbai, 2015.

# அலகு – 3

## சமூக அறிவியல் ஆராய்ச்சிகள்

3.1. சமூக அறிவியல் ஆராய்ச்சி – அறிமுகம்

3.2. சமூக அறிவியல் ஆராய்ச்சியின் முக்கியத்துவம்

3.3. வியாபார ஆராய்ச்சிகள்

3.4. சமூக அறிவியல் ஆராய்ச்சியின் செயல்முறைகள்

## 3.1. சமூக அறிவியல் ஆராய்ச்சி – அறிமுகம்

சமூக அறிவியல் என்பது சமுதாயம் மற்றும் அவற்றுள் உள்ள நபாகளுக்கிடையேயான உறவுகளை படிப்பதாகும். சமூக அறிவியல் பாடத்தில் வியாபாரம், சமூகவியல், வணிகவியல், மக்கள்தொகையியல், அரசியல் அறிவியல், வரலாறு போன்ற பல வகையான பாடங்கள் அடங்கும். இவ்வகை பாடங்களில் மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சியானது சமூக அறிவியல் ஆராய்ச்சி என்று அழைக்கப்படுகிறது. இந்த வகை ஆராய்ச்சிகள் இறுதி பயனாளிகள் பயன்படுத்தும் வகையில் அறிவியல் ரீதியாக நிருபிக்கப்பட்ட முடிவுகளை வழங்குகிறது. மேலும் சமூகத்தில் நிலவும் பலவகையான பிரச்சனைகளை தீர்ப்பதற்கு தீர்வு காணும் விதமாக சமூக அறிவியல் ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. ஒரு பிரச்சனைக்கு நாம் அடிப்படையை கண்டறிய வாய்ப்புள்ளதெனில். சமூக

அறிவியல் ஆராய்ச்சிகள் அவற்றில் ஆராய்ச்சி செய்து அப்பிரச்சனைக்குரிய அடிப்படையை கண்டறிய முயல்கிறது. மேலும் அவ்வகை பிரச்சனைகளுக்கு மிகவும் பொருத்தமான தீர்வினை தர சமூக அறிவியல் ஆராய்ச்சிகள் முயல்கின்றன.

## 3.2. சமூக அறிவியல் ஆராய்ச்சியின் முக்கியத்துவம்

சமூக அறிவியல் எனும் பாடமானது மருத்துவ துறை முதற்கொண்டு வியாபாரம் வரை அனைத்து இடங்களிலும் உள்ளது. சமூக அறிவியல் ஆராய்ச்சிகள் சமூக நலன், கோட்பாடுகளை உருவாக்குதல், முறைகளை வடிவமைத்தல், சமூக திட்டமிடல், கனித்தல் மற்றும் கட்டுப்படுத்துதல் போன்ற பலவற்றுக்கும் இந்த ஆராய்ச்சியானது துணைபுரிகிறது. சுமூக அறிவியல் ஆராய்ச்சியாளர்கள் இவ்வுலகத்தில் உள்ள இணைய பாதுகாப்பு (cyber-Security) போன்ற பல பெரிய பிரச்சனைகளுக்கு தீர்வு காணும் வகையில் உதவிபுரிகின்றனர். மேலும் இவ்வகை ஆராய்ச்சிகள், ஒரு நோய் பரவுவதற்கான காரணங்களை கண்டறிவது, பல நாடுகள் எதிர்கொள்ளும் பெரிய பிரச்சனைகளிலிருந்து தற்காத்துகொள்வதற்கான வழிமுறைகள் போன்ற பல வகை பிரச்சனைகளை தீர்த்துக்கொள்ள சமூக அறிவியல் ஆராய்ச்சிகள் பயன்படுகின்றன. சில நாடுகள் தாங்கள் எதிர்நோக்கும் தினசரி பிரச்சனைகளை சமாளிப்பதற்காக சமூக அறிவியல் ஆராய்ச்சியாளா்களின் உதவிகளை கோருகின்றனர்.

மிக முக்கியமாக இவ்உலகில் ஏறக்குறைய அனைத்து அரசுகளும் பொருளாதாரம் சார்ந்த பிரச்சனைகளை அடிக்கடி எதிர்கொள்கின்றனர். இவ்வகை பிரச்சனைகள் நீண்ட கால அடிப்படையிலோ அல்லது குறுகிய கால அடிப்படையிலோ இருக்கலாம். இவ்வகை பிரச்சனைகளுக்கு அடிக்கடி அவ்வரசுகள் தீர்வு காணவேண்டி இருக்கிறது. இவ்வாறான பொருளாதார பிரச்சணைகளுக்கு திர்வு காண்பதற்காக அவ்வரசுகள் பொருளாதார பாடத்தில் நிபுனத்துவம் பெற்ற சமூக அறிவியல் ஆராய்ச்சியாளர்களின் உதவியை நாடுகின்றனர். அவர்கள் அறிவியல் பூர்வமான ஆராய்ச்சிகளை மேற்கொண்டு இவ்வாறான பொருளாதார பிரச்சனைகளுக்கு தீர்வுகளை பெறுவதற்கு முயற்ச்சி மேற்கொள்கின்னனர்.

சமூக அறிவியல் ஆராய்ச்சியானது ஒரு சமூக குழு அல்லது சமூகத்தின் பிரச்சனைகளுக்கு பயன்படும் விதமாக முடிவுகளை அளிப்பதற்காக மேற்கொள்ளப்படுகிறது. இவ்வாராய்ச்சி அந்த பிரச்சனைக்கான காரணங்களை கண்டறிந்து அதற்கான தீர்வையும் அளிக்கிறது. இது மேலும் சமூக நடப்புகளை படிப்பதன் வாயிலாக மக்களின் வாழ்வில் கட்டமைப்பில் மாற்றங்களை அளிக்கிறது. இவ்வாராய்ச்சி சமூகத்தில் நேர்மறையான மாற்றங்களை

கொண்டுவருகிறது. இது தனது விரிவான நோக்கங்களை அடைவதற்காக, சமூக நடத்தையை பகுப்பாய்ந்து படிக்கிறது. சமூக அறிவியல் ஆராய்ச்சியானது புதுமையை அதிகரிக்கப்படுத்துவதன் வாயிலாக சமுதாய வளர்ச்சிக்கு முக்கிய பங்காற்றுகிறது. இது சமூகத்தின் அதிகாரத்தை மேம்படுத்துவதற்கான அறிவுகளில் அதிக கவனம் செலுத்தி ஆராய்ச்சி செய்கிறது. இது படைப்பாற்றல் மற்றும் புதுமையை மேம்படுத்துவதன் வாயிலாக புதிய கோட்பாடுகளை உருவாக்குகிறது, இக்கோட்பாடுகள் சமூதாய முன்னேற்றத்திற்கு பயன்படுகிறது. சமூக அறிவியல் ஆராய்ச்சியானது ஏற்கனவே ஏற்றுக்கொள்ளப்பட்ட கோட்பாடுகளான, ஊக்கப்படுத்துதல், நடத்தை, தலைமப்பன்புகள், குழு திறமை போன்றவற்றில் அதிகமாக ஆராய்ச்சிகளை மேற்கொள்கிறது. மேலும் தனது புதிய ஆராய்ச்சி முறைகள் மூலமாக ஏற்கனவே ஏற்றுக்கொள்ளப்பட்ட கோட்பாடுகளில் மாற்றங்களையும் கொண்டு வருகிறது.

சமூக அறிவியல் ஆராய்ச்சி சமூதாயத்தை விரிவாக படிப்பதன் வாயிலாக, ஒரு அரசினை திறம்பட நடத்துவதற்கு புதிய சட்டங்களை கொண்டுவருவதற்கும் ஏற்கனவே உள்ள சட்டங்களில் மாற்றங்களை ஏற்படுத்துவதற்கும் பங்களிக்கிறது. இது சமூதாயம் சுமுகமாக செல்ல சமுதாய ஒழுங்கு மற்றும் சமுதாய கட்டுப்பாடுகளை கொண்டுவருவதற்கு பெரிதும் உதவிபுரிகிறது. இவ்வகை ஆராய்ச்சியானது கடந்த காலத்தை படிப்பதன் மூலமாக எதிர்காலத்தை கனித்து சொல்கிறது. எதிர்கால கனிப்பு என்பது, பொருளாதாரமாகவோ, வியாபாரமாகவோ, அரசாகவோ, சமுதாயமாகவோ அல்லது ஒரு செயலாகவோ இருக்கலாம். இதன் வாயிலாக ஒரு அரசானது, பொருளாதாரம் அல்லது வியாபாரம் அல்லது சமுதாயம் ஆகியவற்றின் எதிர்கால போக்குகளுக்காக தற்போதய சட்டத்திட்டங்களை கருத்தில் எடுத்துக்கொள்ள உதவுகிறது. இவ்வாறாக பல வகைகளில் சமூக அறிவியல் ஆராய்ச்சியானது முக்கியத்துவம் பெறுகிறது.

## 3.3. வியாபார ஆராய்ச்சிகள்

மேற்கண்டவாறு சமூக அறிவியல் ஆராய்ச்சியானது சமூக அறிவியல் பாடங்களில் மட்டுமல்லாது சில அறிவியல் துறைகளில் கூட தனது பங்களிப்பை தருகிறது. இது ஒரு வியாபார உலகமாகும். வியாபாரம் இல்லையெனில் இவ்வுலகம் இல்லை என்கிற வகையில் வியாபாரமானது கடந்த நூற்றாண்டில் மிக அபரிவிதமாக வளர்ந்துள்ளது. சிறிய அளவிலான வியாபாரமோ அல்லது பெரிய அளிவிலான வியாபாரமோ, அந்த வியாபாரங்களை நிர்வாகம் செய்யக்கூடியவர்கள் தினந்தோரும் வியாபாரத்தில் பல பிரச்சனைகளை எதிர்கொள்கின்றனர், மேலும் அப்பிரச்சனைகளை தீர்ப்பதற்காக அவர்கள் பல்வேறு முடிவுகள் எடுக்கவேண்டியுள்ளது. அவர்கள் எடுக்கும் முடிவுகளானது

அவ்வியாபாரத்தினை இன்னமும் வளர்க்கும் விதமாக இருக்கவேண்டும். இவ்வாறாக வியாபாரத்தில் ஏற்படும் பல பிரச்சனைகளை தீர்ப்பதற்காக சமூக அறிவியல் ஆராய்ச்சியானது பெருமளவில் உதவி புரிகிறது.

குறிப்பு

எந்தவொரு வியாபாரத்தின் முக்கியமான நோக்கம் இலாபம் ஈட்டுவதாக இருக்கும். அவ்வாறு அவர்கள் இாபம் ஈட்டவேண்டுமெனில், அவர்கள் அதிக அளவில் அவர்களது பொருட்களை சந்தையிட வேண்டும். வியாபாரத்தில் சந்தையிடல் தொடர்பாக பலவகையான பிரச்சனையை எதிர்கொள்ளவேண்டியுள்ளது. இதை சாத்தியப்படுத்த வியாபாரிகள் தங்களின் நுகர்வோர்களின் மனநிலை மற்றும் அவர்களின் வாழக்கை முறையை அறிந்துகொள்ள முற்படுகின்றனர். இவ்வாறான தகவல்களை ஆராய்ச்சிகள் வாயிலாக பெற்று அவற்றை பகுப்பாய்வு செய்கின்றனர். இவ்வகை ஆராய்ச்சிகள் மூலமாக பெறப்படும் முடிவுகளானது வியாபாரிகள் எதிர்காலத்தில் தங்கள் பொருட்களை நுகர்வோர்கள் எதிர்பார்க்கும் வகையில் வடிவமைக்க உதவியாக அமைகின்றன. இவ்வாறு செய்வது பொருட்களை சந்தையிடுகையில் வியாபாரிகள் எதிர்கொள்ளும் பிரச்சனைகளை பெருமளவில் குறைக்கிறது. இது நுகர்வோர்களின் தேவைக்கேற்றவாறு வியாபாரத்தில் திட்டமிட பயன்படுகிறது. இது வியாபாரத்தின் ஒட்டுமொத்த அடக்கவிலையை குறைப்பது மட்டுமல்லாமல் வியாபாரத்தின் இலாபத்தையும் அதிகரிக்கிறது. மேலும் வியாபாரியின் பொருளானது நுகர்வோர் மத்தியில் பிரபலமடைகிறது, இது எதிர்காலத்தில் வியாபாரி ஈட்டும் இலாபத்தின் தன்மையையும் அதிகரிக்கிறது.

சந்தை தொடர்பான பிரச்சனை மட்டுமல்லாமல், ஒரு வியாபாரி தனது வியாபாரத்தில் நிதியியல், தொழிலாளர் மேலாண்மை, உற்பத்தி, பொருட்களை வாங்குதல், விளம்பரம் செய்தல், பொருட்களுக்கு விலையிடல் போன்ற பல வகையான பிரச்சனைகளை எதிர்கொள்கின்றனர். இவ்வகை பிரச்சனைகளுக்கு சிறப்பான ஆராய்ச்சிகள் வாயிலாக முடிவுகள் எட்டப்படுகின்றன. நிதியியலில், வியாபாரியின் நிதியியில் மேலாண்மை எவ்வாறு செய்யப்படுகிறது என்பதை ஆராயலாம், இதில், அவரது குறுகியகால நிதி மேலாண்மை, நீண்ட கால நிதி மேலாண்மை, அவரு இலாபம் ஈட்டும் தன்மை, பங்கு சந்தையில் தங்கள் நிறுவனத்தின் பங்கின் விலையின் போக்கு என்கிற பல கோணங்களில் ஆராய்ச்சிகளை மேற்கொள்ளலாம். அதே போல வியாபாரி தொழிலாளர் மேலாண்மை, உற்பத்தி, பொருட்களை வாங்குதல், விளம்பரம் செய்தல், பொருட்களுக்கு விலையிடல் போன்ற பிரச்சனைகளிலிலும் ஆராய்ச்சிகள மேற்கொண்டு சிறப்பான முடிவுகளை எடுப்பதற்கு சமூக அறிவியல் ஆராய்ச்சியானது உதவி செய்கிறது.

## 3.4. சமூக அறிவியல் ஆராய்ச்சியின் செயல்முறைகள்

குறிப்பு

நாம் முதல் பாடத்தில் ஆராய்ச்சியின் செயல்முறைகளை பார்த்தோம். இந்த பாடத்தில் நாம் சமூக அறிவியல் ஆராய்ச்சிக்கான செயல்முறைகளை பார்க்கப்போகிறோம். எனினும், பொதுவாக ஆராய்ச்சி செயல்முறைகளுக்கும் சமூக அறிவியல் ஆராய்ச்சி செயல்முறைகளுக்கும் பெரிய வேறுபாடுகள் எதுவுமில்லை.

ஒரு சமூக அறிவியல் ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சியினை திறம்பட செய்து அதன் நோக்கங்களை மிகத் துல்லியமாக எட்டவேண்டுமாயின். அவர் சமூக அறிவியல் ஆராய்ச்சியின் செயல்முறைகளை தெளிவாகவும் ஆழமாகவும் தெரிந்துகொள்ள வேண்டும். பின்னர், இவ்வாறான அறிவியியல்பூர்வமான செயல்முறைகளில் எவ்வித மாறுபாடும் இன்றி முறையாக பின்பற்றி அவரது ஆராய்ச்சி செய்யப்படுமாயின், அவ்வாராய்ச்சியின் நோக்கங்களை மிகத்துல்லியமாக எட்ட முடியும். இவ்வாறான சமூக அறிவியல் ஆராய்ச்சியின் செயல்முறைகளானது தனது ஆராய்ச்சி பிரச்சனையை வகுத்தலில் ஆரம்பித்து அவ்வாராய்ச்சியை சிறப்பாக முடித்து அதை அறிக்கையாக சமர்பித்தல் வரையிலானவை அடங்கும். நாம் இப்பகுதியில் சமூக அறிவியல் ஆராய்ச்சியின் செயல்முறைகளை விளக்கமாக பார்க்கபோகிறோம்.

### 3.4.1. ஆராய்ச்சி பிரச்சனையை வகுத்தல் (Formulation of Research Problem)

ஒரு ஆராய்ச்சி என்பது ஒரு பிரச்சனையை எடுத்து அதை பற்றி படித்து அதற்கு தீர்வினை அளிப்பதாக உள்ளது. ஒரு சமூக அறிவியல் பாடத்தில் ஒரு ஆராய்ச்சியாளர் ஆராய்ச்சியை மேற்கொள்கிறார் எனில். முதலில் அவர் தனது ஆராய்ச்சிக்கான பிரச்சனையை முதலில் வகுத்துக்கொள்ள வேண்டும். ஆராய்ச்சி பிரச்சனையானது இயற்கையான பிரச்சனைகளாகவோ அல்லது இரண்டு மாறிலிகளுக்கிடையேயான உறவுகளை பற்றிய பிரச்சனைகளாகவோ இருக்கலாம். மேற்கண்ட எவ்வகையான பிரச்சனையாக இருந்தாலும், ஒரு ஆராய்ச்சியாளர் முதலில் தாம் ஆராய்ச்சி மேற்கொள்ளவிருக்கும் பாடத்தினை முடிவு செய்துகொள்ள வேண்டும். உதாரணமாக அவர் வியாபாரம் (Business) சம்பந்தப்பட்ட பாடத்தில் மேற்கொள்கிறார் எனலாம். பிறகு அப்பாடத்தில் பல உட்பிரிவுகள் உள்ளன (Broad Fields), அவற்றுள் எந்த உட்பிரிவை அவர் தேர்ந்தெடுத்துக்கொள்ளபோகிறார் என்று பின்னர் முடிவு செய்யவேண்டும். ஏனெனில் ஒரு திறமையான ஆராய்ச்சி என்பது ஒரு சிறிய பிரச்சனையை எடுத்துக்கொண்டு அதை முழுமையாகவும் ஆழமாகவும் மேற்கொள்ள வேண்டும். வியாபாரத்தில் சந்தையியல்,

குறிப்பு

நிதியியல், தொழிலாளர் மேலாண்மை போன்ற பல உட்பிரிவுகள் உள்ளன. வியாபாரப்பாடத்தில் அவர் சந்தையிடுகை (Marketing) என்கிற உட்பிரிவினை தேர்ந்தெடுத்துக்கொள்கிறார் எனகொள்ளலாம். இவ்வாறு பாடத்தையும் அதன் உட்பிரிவையும் ஒரு ஆராய்ச்சியாளர் தேர்ந்தெடுக்கும்போது, அவருக்கு அப்பாடத்தில் நல்ல புரிதல் இருக்க வேண்டும். மேலும் அவர் தேர்ந்தெடுக்கும் பாட உட்பிரிவில் ஆழ்ந்த அறிவு இருத்தல் அவசியம். அவ்வாறு அவர் பாடத்தின் உட்பிரிவினை தேர்ந்தெடுத்துக்கொண்ட பிறகு, அவர் தனது ஆராய்ச்சிக்கான பிரச்சனையை வகுத்துக்கொள்ள வேண்டும். நமது உதாரணத்தில் அவர் 'சந்தையிடுகை' என்கிற பாட உட்பிரிவை தேர்ந்தெடுத்துக்கொண்டுள்ளார். சந்தையிடுகை என்பது பொருட்களையோ அல்லது ஒரு சேவையையோ சந்தையிடும் அனைத்து நடவடிக்கைகளின் தொகுப்பாகும். எனவே அவர் ஒரு பொருளை தேர்ந்தெடுத்துக்கொள்ளப்போகிறாறா? அல்லது ஒரு சேவையை தேர்ந்தெடுத்துக்கொள்ளப்போகிறாரா? என்பதை முடிவுசெய்துகொள்ள வேண்டும்.

அவ்வாறு தேர்ந்தெடுத்த பிறகு அவர் அந்த பொருள் அல்லது சேவை தொடர்பான எந்த பிரச்சனையை ஆராய்ச்சி செய்துகொள்ளப்போகிறார் என்பதை அவர் முறையாக வகுத்துக்கொள்ள வேண்டும். உதாரணமாக அவர் ஒரு சூரிய மின் உற்பத்தி விளக்கை (Solar light) உற்பத்திசெய்யும் ஒரு உற்பத்தியாளர் தனது பொருளினை தமிழ்நாட்டில் சந்தையிடுகையில் எதிர்கொள்ளும் பிரச்சனைகளை தனது ஆராய்ச்சி பிரச்சனையாக வகுத்துக்கொள்ளலாம். இவ்வாறு ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சி பிரச்சனையை வகுத்துக்கொண்டபிறகு, அவர் அந்த பிரச்சனையை முறையாக அறிக்கையாக தயார் செய்ய வேண்டும். பிறகு அந்த பிரச்சனை அறிக்கையை மையமாக வைத்து அவர் தனது ஆராய்ச்சிக்கான கேள்விகளை வகுத்து அதன் வாயிலாக ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சி குற்க்கோள்களை வடிவமைக்க வேண்டும்.

## 3.4.2. ஆய்வு முன்னோடிகள் (Review of Literature)

முந்தய பகுதியில் பார்த்தவாறு ஒரு ஆராய்ச்சியாளர் முன்னதாக தனது ஆராய்ச்சி பிரச்சனையை முறையாக வகுத்துக்கொள்ள வேண்டும். அவர் வகுத்துக்கொண்ட பிரச்சனையானது ஆராய்ச்சிக்கு புதுமையானதாக இருத்தல் வேண்டும். ஏற்கனவே அப்பிரச்சனையில் ஆராய்ச்சிகள் பல மேற்கொள்ளப்பட்டுள்ளது எனில், தற்போதய ஆராய்ச்சி ஏதேனும் புதிதாக கண்டறிய வேண்டும், இல்லையெனில் இவ்வாராய்ச்சி வீணாக கருதப்படும். இக்குறிக்கோளினை எட்டுவதற்கு ஒரு ஆராய்ச்சியாளர் தான் மேற்கொள்ளவிருக்கும் ஆராய்ச்சி தொர்பாக எற்கனவே ஆராய்ச்சியாளர்களால் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளை தொகுத்து அதை படித்து அதை தொகுத்து வைத்துக்கொள்வது என்பது

அவசியமாகும். இவ்வாறு செய்வது நமக்கு முன்னா் ஆராய்ச்சியாளா்கள் இத்துறையில் மேற்கொண்ட ஆராய்ச்சிகள் என்னென்ன அவா்களின் ஆராய்ச்சி முடிவுகள் என்ன என்பதை தெரிந்துகொள்வதுடன் அவா்கள் பயன்படுத்திய ஆராய்ச்சி வடிவமைப்பு, பகுப்பாய்வு கருவிகள் போன்றவற்றையும் தெரிந்து கொள்ள முடியும். முக்கியமாக, இதை கொண்டு இந்த துறை ஆராய்ச்சியில் ஆராய்ச்சி இடைவெளி என்ன? என்பதை தெரிந்துகொண்டு அவ்விடைவெளியை நிரப்பும் விதமாக தற்போதய ஆராய்ச்சியை நாம் மேற்கொள்ள முடியும்.

பொதுவாக ஆராய்ச்சி முன்னோடியானது கீழ்கண்டவாறு இரண்டு வகையாக பிரிக்கப்படுகிறது.

(அ) கருத்து மற்றும் கோட்பாடுகள் மீதான ஆய்வு முன்னோடி

(ஆ) முந்தய ஆராய்ச்சியின் கண்டுபிடிப்புகள்

**(அ) கருத்து மற்றும் கோட்பாடுகள் மீதான ஆய்வு முன்னோடி**

ஒரு ஆராய்ச்சியை மேற்கொள்ளவேண்டுமெனில், ஆராய்ச்சியாளா் அந்த பாடத்திலும் அவா் மேற்கொள்ளும் ஆராய்ச்சியின் பாட உட்பிரிவிலும் மிக ஆழமான அறிவு இருத்தல் அவசியம் என்பதை முந்தய பகுதியில் பாா்த்தோம். அதே போல அவா் மேற்கொள்ளவிலுக்கும் ஆராய்ச்சி தொடா்பான கருத்துகள் மற்றும் கோட்பாடுகள் ஆகியவற்றில் அவா் மிகத்தெளிவான அறிவினை பெற்றிருத்தல் அவசியமாகும். இதன் படி ஆராய்ச்சியாளா் அவா் மேற்கொள்ளவிருக்கும் ஆராய்ச்சி தொடா்பான முந்தய ஆராய்ச்சிகளை தொகுத்து அவற்றுள் விவரிக்கப்பட்டுள்ள அல்லது ஏற்படுத்தப்பட்டுள்ள கருத்துகள் மற்றும் கோட்பாடுகள் பற்றிய தெளிவான நடப்பு அறிவினை பெற வேண்டும். இதற்கு அவா் மிக கவனமாக தமது ஆராய்ச்சி தொடா்பான கருத்து மற்றும் கோட்பாடுகளை உள்ளடக்கிய முந்தய ஆராய்ச்சிகளை தொகுக்க வேண்டும், பின்னா் அவற்றை படித்து தனது ஆராய்ச்சி அறிக்கையில் சுருங்கசொல்ல வேண்டும். இவ்வகை ஆராய்ச்சி முன்னோடிகள் முற்றிலுமாக கருத்து மற்றும் கோட்பாடுகளை விவரிப்பதாக இருக்கும்.

**(ஆ) முந்தய ஆராய்ச்சியின் கண்டுபிடிப்புகள்**

அடுத்ததாக அவ்வாராய்ச்சியாளா், தான் மேற்கொள்ளவிருக்கும் ஆராய்ச்சி தொடா்பாக முன்னா் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளை தொகுத்து அவற்றில் அவ்வாராய்ச்சியாளா்கள் என்னென்ன கண்டுபிடிப்புகள் செய்துள்ளனா் என்பதை ஐயமில்லாமல் தெளிவுறவேண்டும். இவ்வகை ஆய்வு முன்னோடிகள் வாயிலாக, ஆராய்ச்சியாளா் தனது துறையில் இதற்கு முன்னா் எவ்வகையான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன, அவை எந்தெந்த இடங்களில் மேற்கொள்ளப்பட்டுள்ளன, அவ்வாராய்ச்சிகளுக்கு எவ்வகையான தகவல்கள் திரட்டப்பட்டன, எவ்வகையான ஆய்வு குறிக்கோள்கள் வடிவமைக்கப்பட்டன, தகவல்களை பகுப்பாய்வு செய்வதற்கு

எவ்வகையான கருவிகள் அல்லது பகுப்பாய்வு முறைகள் மேற்கொள்ளப்பட்டன மற்றும் அவ்வாராய்ச்சிகள் வாயிலாக அவ்வாராய்ச்சியாளர்கள் என்னென்ன ஆராய்ச்சி முடிவுகளை கொண்டுவந்துள்ளனர் என்பனவற்றை புரிந்துகொள்ள முடியும். இவை அனைத்தும் ஒவ்வொரு முன்னோடி ஆராய்ச்சிக்கும் சுருக்கமாக ஆராய்ச்சி அறிக்கையில் அளிக்கப்பட வேண்டும். இதன் மூலமாக ஆராய்ச்சியாளர் இத்துறையில் விடுப்பட்டுபோன ஆராய்ச்சி இடைவெளியை எளிதாக கண்டறிய முடியும். இதன் பயனாக அவர் தனது ஆராய்ச்சியை புதுமையாக மேற்கொள்ள முடியும்.

## 3.4.3. கருதுகோள்களை உருவாக்குதல் (Formulating Hypotheses)

விரிவான முந்தய ஆராய்ச்சிகளை பார்த்தபின்னர், ஒரு ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சிக்கான கருதுகோள் அல்லது கருதுகோள்களை உருவாக்க வேண்டும். கருதுகோள்கள் என்பது அறிவியல் பூர்வமாக சோதனை செய்து முடிவுபெறும் பொருட்டு, ஆராய்ச்சியாளர் செய்யும் தற்காலிகமாக தனது ஆராய்ச்சி முடிவை பற்றிய ஒரு அனுமானமாகும். இவ்வாறு செய்வது, திரட்டப்பட்ட தகவல்களை சோதனை செய்யும் முறைகளை திறம்பட வடிவமைப்பதும் அல்லது தேர்ந்தெடுப்பது மற்றும் திரட்டப்பட்ட தகவல்களின் தரத்தினை அறிந்துகொள்வதற்கம் உதவுகிறது. பெரும்பாலான ஆராய்ச்சிகளில் கருதுகோள்கள் உருவாக்குவது முக்கிய பங்காற்றுகிறது. உருவாக்கப்படும் கருதுகோள்கள் தெளிவானதாகவும் குறிப்பிட்டதாகவும் இருத்தல் வேண்டும் மேலும், ஒரு ஆராய்ச்சிக்கான கருதுகோள்களின் எண்ணிக்கை வரையறுக்கப்பட்டதாக இருத்தல் வேண்டும். ஏனெனில் உருவாக்கப்படும் ஒவ்வொரு கருதுகோள்களும் முறையாக சோதனை செய்து முடிவினை அறிவிப்பதாக இருத்தல் வேண்டும். ஆராய்ச்சியாளர்கள் மேற்கொள்ளும் ஆராய்ச்சி பாடத்தில் குறைபாடுகளற்றதாக்கவும் ஆராய்ச்சியாளரை ஆராய்ச்சியில் சரியான பாதையில் கொண்டுசெல்லவும் கருதுகோள்கள் பெருமளவில் துணைபுரிகின்றன. இவ்வாறான கருதுகோள்கள், ஆராய்ச்சியாளரை துல்லியமாக சிந்திக்கவும், தனது ஆராய்ச்சியின் பிரச்சனையின் முக்கிய அம்சங்களை சிந்திக்கவும் வழிவகை செய்கின்றன. மேலும் கருதுகோள்கள் தனது ஆராய்ச்சிக்கு ஆராய்ச்சியாளர்கள் எவ்வகையான தகவல்களை திரட்ட வேண்டும் எந்த மாதிரியான தகவல்களை திரட்ட வேண்டும் என்பன போன்றவற்றை தீர்மாணித்துகொள்ளவும் பயன்படுகிறது. ஆராய்ச்சியின் முடிவில், இவ்வாறு ஏற்படுத்தப்பட்ட கருதுகோள்கள் ஒன்று ஏற்றுக்கொள்ளப்படலாம் அல்லது அக்கருதுகோள்கள் நிராகரிக்கப்படலாம். இவற்றை முடிவுசெய்வதற்கு செய்யவேண்டிய சோதனைகளுக்கென பல்வேறு புள்ளியல் கருவிகள் நடைமுறையில் உள்ளன.

## 3.4.4. ஆராய்ச்சி வடிவமைப்பை தயார் செய்தல் (Preparing Research Design)



ஒரு சமூக அறிவியல் ஆராய்ச்சியில் ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சி பிரச்சனைகளை தெளிவான வார்த்தைகளில் விவரிக்கவேண்டும். அவ்வாறு செய்த பின்னர், ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சிக்கு பொருத்தமான ஆராய்ச்சி வடிவமைப்பை தேர்ந்தெடுத்து அல்லது உருவாக்கிக்கொள்ள நிர்மாணிக்கப்படுகிறார். அதாவது, அவர் எந்த கருத்துரு கட்டமைப்பிற்குள் (conceptual structure) தனது ஆராய்ச்சியை செய்துகொள்ளப்போகிறார் என்பதை தீர்மாணிப்பது. இவ்வாறாக தேர்வுசெய்யப்படும் ஆராய்ச்சி வடிவமைப்பானது ஆராய்ச்சியாளருக்கு தனது ஆரய்ச்சியை திறம்பட செய்யவும் அதிகபடியான ஆராய்ச்சி முடிவுகளை அறிவிப்பதற்கும் உதவுகிறது. வேறுவகையில் கூறுவதாயின், ஒரு நல்ல ஆராய்ச்சி வடிவமைப்பின் பணியானது, தொடர்புடைய ஆராய்ச்சி முடிவுகளை குறைந்தபட்ச செலவினம், குறைந்த நேரம் மற்றும் குறைந்தபட்ச முயற்சிகளால் தருவதாகும்.

## 3.4.5. மாதிரி வடிவமைப்பை தீர்மானித்தல் (Determination of Sample Design)

ஒரு சமூக அறிவியல் ஆராய்ச்சியாளர் மேற்கொள்ளும் ஆராய்ச்சியில், அவர் எந்த குழுவை அல்லது எந்த பகுதியை அல்லது எந்த அலகினை தேர்ந்தெடுக்கப்போகிறார் என்பது முக்கியமானதாகும். உதாரணமாக அவர் ஒரு நகரத்தில் ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தின் குளிரூட்டியை (Air Conditioner) பயன்படுத்துவதில் அவர்களது திருப்தி அளவு (Satisfaction) மற்றும் அவர்கள் சந்திக்கும் பிரச்சனைகளை படிக்கும்போது, அந்நகரத்தில் குறிப்பிடப்பட்ட நிறுவனத்தின் குளிரூட்டிகளை பயன்படுத்தும் மொத்த நபர்களின் எண்ணிக்கை மக்கள்தொகை (Population) என்று அழைக்கப்படுகிறது. அவ்வாறான மக்கள்தொகையின் அளவு மிக சிறியதாக இருக்கும்பட்சத்தில் ஆராய்ச்சியாளர் அனைத்து நபர்களிடமும் கணக்கெடுப்பு (survey) முறையில் தகவல்களை திரட்டி பகுப்பாய்வு செய்து ஆராய்ச்சி முடிவுகளை பெறமுடியும். ஆனால் மக்கள்தொகையின் அளவு மிக பெரிதாக இருக்கும்பட்சத்தில், இவ்வாறு செய்வது சாத்தியமில்லை. இந்த சூழலில் மாதிரியை (Sample) தீர்மாணிக்கும் நிலை ஏற்படுகிறது. மாதிரி என்பது. நாம் படிக்கப்போகும் மக்கள்தொகையில், பிரதிநிதிகளாக ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையை மாதிரியாக எடுத்துக்கொண்டு, அவர்களிடம் மட்டும் தகவல்களை திரட்டி ஆராய்ச்சி செய்து, அதன் முடிவுகளை பொதுப்படையாக்குவதாகும். ஒரு ஆராய்ச்சி செய்ல்முறையில், ஆராய்ச்சி

வடிவமைப்பை உருவாக்கியதற்கு பிறகு, ஆராய்ச்சியாளர், தனது ஆராய்ச்சிக்கான மாதிரியை வடிவமைத்தல் அவசியமாகும். இவ்வாறு மாதிரிகளை தேர்ந்தெடுத்துக்கொள்ள பல்வேறு முறைகள் ஏற்கனவே உருவாக்கப்பட்டுள்ளன. அவற்றுள் தற்போதய ஆராய்ச்சிக்கு பொருத்தமான ஒன்றை ஆராய்ச்சியாளர் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட மாதிரி முறையில் தேர்ந்தெடுக்கப்படும் மாதிரிகளானது, ஒட்டுமொத்த மக்கள்தொகையின் வாயிலாக தகவல்கள் பெறப்பட்டு ஆராய்ச்சி முடிவுகள் மேற்கொள்ளப்பட்டால் எவ்வாறு இருக்குமோ அதை பிரதிபலிக்க வேண்டும். பொதுவாக மாதிரிகளின் எண்ணிக்கை அதிகரிக்க அதிகரிக்க, ஆராய்ச்சி முடிவுகள் துல்லியமாக இருக்கும் என்று நம்பப்படுகிறது. மாதிரிகளை தேர்ந்தெடுக்கும்போது எவ்வித சார்பு தன்மையும் இருத்தல் கூடாது (bias), எனினும் நடைமுறையில் ஒரு மாதிரி தேர்ந்தெடுக்கப்படுகிறது எனில் அதை தேர்ந்தெடுத்ததில் சார்புத்தன்மை உள்ளதா இல்லையா என்பதை சோதனை செய்வது கடினமான ஒன்றாகும். எனவே ஆராய்ச்சிக்கான மாதிரிகளை தேர்ந்தெடுக்கும்போது ஆராய்ச்சியாளர் மிகுந்த கவனத்துடன் இருத்தல் வேண்டும்.

## 3.4.6. தகவல் திரட்டுதல் (Data Collection)

ஆராய்ச்சி செயல்முறையில் ஆராய்ச்சியாளர் மாதிரிகளை தேர்ந்தெடுத்துக்கொண்ட பிறகு, அவர் தகவல்களை திரட்டுதல் வேண்டும். ஏனெனில் ஒரு ஆராய்ச்சியில் முடிவுகளை எட்டுவதற்கு பெறப்படும் தகவல்கள் இதயம் போன்றதாகும். பொர்துவாக ஆராய்ச்சிகளுக்கு தேவைப்படும் தகவல்களை இரண்டு வகைகளாக பிரிக்கலாம், அவை முதன்மை தகவல்கள் (Primary Data) மற்றும் இரண்டாம் நிலை தகவல்கள் (Secondary Data). முதன்மை தகவல்கள் என்பது, ஒரு ஆராய்ச்சியாளர் முதன்முறையாக திரட்டும் தகவல்களை குறிக்கும். இவ்வகை தகவல்கள் வேறு எங்கும் இதற்கு முன்னர் திரட்டப்பட்டிருக்காது அல்லது ஆராய்ச்சிகளில் பயன்படுத்தப்பட்டிருக்காது. உதாரணமாக ஒரு ஆராய்ச்சியாளர் சந்தையியல் தொடர்பான ஒரு ஆராய்ச்சிக்கு நுகர்வோக்ளிடமிருந்து கேள்விப் பட்டியல் வாயிலாக தகவல்களை திரட்டுகிறார் எனில் இது முதன்மை தகவல்கள் என்று அழைக்கப்படுகிறது. இரண்டாவதாக இரண்டாம்நிலை தகவல்கள், இவை ஏற்கனவே திரட்டப்பட்ட தகவல்களை குறிக்கிறது. இவ்வகை தகவல்கள் ஏற்கனவே திரட்டப்பட்டு இருக்கும், இவற்றை ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சிக்கு பயன்படுத்திக்கொள்வார். உதாரணமாக, ஒரு நிறுவனத்தின் நிதி நிலையை படிக்க விரும்பும் ஒரு ஆராய்ச்சியாளர் அந்நிறுவனத்தால் தயார் செய்யப்பட்ட நிதிநிலை அறிக்கைகளை பயன்படுத்திக்கொள்வார், இவ்வாறான நிதி நிலை அறிக்கைகள் அந்த நிறுவனத்தால் ஏற்கனவே தயார் செய்யப்பட்டு பாதுகாக்கப்பட்டு வரப்படுவதாகும். எனவே இவை இரண்டாம் நிலை தகவல்கள் என்று அழைக்கப்படுகிறது. முதன்மை

தகவல்களை பொருத்தவரையில், ஆராய்ச்சியாளர் பல வகைகளில் தகவல்களை திரட்டுகிறார், அதாவது அவர் கேள்விப்பட்டியல்களை மாதிரிகளிடம் அளித்து திரட்டுவது (Questionnaire), நேர்காணல் முறை (Interview), கூர்ந்தறிதல் முறை (Observation), தொலைபேசி, மின்னஞ்சல், இணையம் போன்ற வழிகளில் ஆராய்ச்சியாளர் முதன்மைத் தகவல்களை திரட்டுகிறார். இரண்டாம் நிலை தகவல்களை ஆராய்ச்சியாளர், நிறுவனம் அல்லது அரசு அல்லது பிற அமைப்புகள் கொண்டுள்ள அறிக்கைகள், தகவல் களஞ்சியங்கள் போன்றவற்றின் வாயிலாக திரட்டுகின்றனர்.

## 3.4.7. ஆராய்ச்சியை மேற்கொள்ளுதல் (Execution of Research)

ஆராய்ச்சி செயல்முறைகளில், இவ்வாறாக தகவல்களை திரட்டி முடித்த பின்னர், ஆராய்ச்சியாளர் ஆராய்ச்சியினை மேற்கொள்ளல் வேண்டும். இது ஆராய்ச்சி முறைகளில் முக்கியமான செயல்முறையாகும். இதில், ஆராய்ச்சியாளர் திரட்டிய தகவல்கள் போதுமானவையா, ஆராய்ச்சிக்கு உகந்தவையா போன்றவற்றை முடிவுசெய்துகொள்ள வேண்டும். மேலும் ஆராய்ச்சியாளர் இவ்வாராய்ச்சி சரியான பாதையில் செய்யப்படுகிறதா மற்றும் முறையாக செய்யப்படுகிறதா என்பதை ஆய வேண்டும். கணக்கெடுப்பு (survey method) முறைப்படி தகவல்கள் திரட்டப்பட்டிருந்தால், அத்தகவல்களுக்கு உடனுக்குடன் குறியீடு இடுவது என்பது சாத்தியமாகும். அவ்வாறு இல்லாமல் மாதிரிகளிடமிருந்து தகவல்கள் திரட்டப்பட்டிருந்தால், அவ்வாறு தகவல்களை திரட்டுவதற்கு ஆராய்ச்சியாளரால் நியமிக்கப்பட்ட நபர்களுக்கு முறையான பயிற்சி அளித்து பின்னர் தகவல்கள் திரட்டப்பட வேண்டும். அவ்வாறு திரட்டப்பட்ட தகவல்களின் சரித்தன்மையை ஆராய்ந்து பின்னர் அந்த தகவல்களுக்கு குறியீடுகள் அளிக்கப்பட வேண்டும். பொதுவாக இறுதி தகவல் திரட்டல் செய்யப்படுவதற்கு முன்னர் மாதிரி தகவல் திரட்டல் (pilot study) செய்யப்பட வேண்டும். இம்முறையில் மாதிரிகளில் ஒரு சிறு எண்ணிக்கையை தேர்ந்தெடுத்துக்கொண்டு அவர்களிடமிருந்து தகவல்கள் திரட்டப்பட வேண்டும், இத்தகவல்களை கொண்டு திரட்டப்பட்ட தகவல்கள் போதுமானதா அல்லது ஏதேனும் சேர்க்கப்பட வேண்டுமா அல்லது திரட்டப்பட்ட தகவல்களில் தேவையற்றது ஏதேனும் உள்ளதா போன்றவற்றை ஆய்ந்து அதற்கேற்றார் போல இறுதி தகவல் திரட்டினை வடிவமைத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு செய்வது தகவல்களின் துல்லியத்தன்மையை உறுதி செய்வதுடன் ஆராய்ச்சி செயல்முறைகள் தடங்கல் இல்லாமல் மேற்கொள்ள உதவி புரிகிறது.

### 3.4.8. தகவல்களை பகுப்பாய்தல் (Data Analysis)



மேற்கண்டவாறு ஆராய்ச்சிக்கான தகவல்களை திரட்டிய பின்பு ஆராய்ச்சியாளர் அத்தகவல்களை பகுப்பாய்வு செய்ய வேண்டும். தகவல்களை பகுப்பாய்வு செய்வதற்கு பல்வேறு புள்ளியல் கருவிகள் கழக்கத்தில் உள்ளன. முன்னதாக ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சிக்காக திரட்டப்பட்ட தகவல்களை பகுப்பாய்வு செய்வதற்கு பொருத்தமான புள்ளியியல் கருவிகள் மற்றும் இதர கருவிகளை தேர்ந்தெடுத்து அல்லது வடிவமைத்து வைத்துக்கொள்ள வேண்டும். இந்த செயல்முறைக்கு, தகவல்களுக்கு முறையாக குறியீடுகள் அளிப்பது அவற்றை பகுப்பாய்வு செய்வதற்கு ஏற்றவாறு முறையாக பட்டியலிருவது போன்ற பணிகளை செய்துகொள்ள வேண்டும். இதற்கென ஆராய்ச்சியாளர்கள் பொதுவாக திரட்டப்பட்ட தகவல்களை பயன்படுத்தக்கூடிய வகையில் பல்வேறு பிரிவுகளாக பிரித்து வைத்துக்கொள்கின்றனர். உதாரணமாக, திரட்டப்பட்ட தகவல்களை மாதிரிகளின் சொந்த தகவல்கள், பொருளாதாரம் சார்ந்த தகவல்கள், அவர்கள் வாங்கும் பொருள் பற்றிய கருத்துகள் போன்ற வகையில் அத்தகவல்களை பிரித்து வைத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு செய்வது பகுப்பாய்வு செய்வதற்கும் அதற்கு பிறகு ஆராய்ச்சி முடிவுகளை விளக்குவதற்கும் ஏதுவாக உள்ளது. அதன் பின்னர் தகவல்களை பகுப்பாய்வு செய்ய வேண்டும்.

பகுப்பாய்வு செய்யும்போது, முன்னர் புள்ளியியல் மற்றும் பிற கருவிகளை ஆராய்ச்சியாளர் அவரே அல்லது அத்துறையில் தேர்ந்தவர்கள் உதவியுடன் கையால் செய்தனர். ஆனால் தற்போது பல கனினி மென்பொருட்கள் கிடைக்கின்றன. எனவே அதற்கேற்றார்போல தகவல்களை குறியீடு செய்து கனினியில் உள்ளீடு செய்து ஆராய்ச்சியாளர் புள்ளியியல் மற்றும் பிற கருவிகளை கனிப்பொறி வாயிலாக பகுப்பாய்வினை மேற்கொள்கிறார். இவ்வாறு கனினி வாயிலாக பகுப்பாய்வை மேற்கொள்ளும்போது திரட்டப்பட்ட தகவல்களின் எண்ணிக்கை எந்த அளவுக்கு அதிகமாக இருந்தாலும் எவ்வித சிரமமும் ஏற்படுவதில்லை. இவ்வாறாக மேற்கொள்ளப்பட்ட முடிவுகள் புள்ளியியல் வடிவத்தில் கிடைக்கிறது. இது அனைத்து சார் மக்களுக்கும் புரியும் என்று கூறிவிட முடியாது. எனவே பகுப்பாய்வு முடிந்த பின்னர் ஆராய்ச்சியாளர் பெறப்பட்ட முடிவுகளை ஆராய்ச்சி அறிக்கையை படிப்போர் புரிந்துகொள்ளும் விதமாக முறையாக அட்டவணைப்படுத்த வேண்டும்.

## 3.4.9. கருதுகோள்களை சோதனை செய்தல் (Testing Hypotheses)

குறிப்பு

ஆராய்ச்சி செயல்முறைகளில் மூன்றாவதாக நாம் ஆராய்ச்சிக்கான கருதுகோள்களை உருவாக்க வேண்டும் என்பதை பார்த்தோம். கருதுகோள்கள் என்பது ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சி தொடர்பாக தற்காலிகமாக மேற்கொளளும் அனுமானமாகும். இவற்றை தேவையான தகவல்களை கொண்டு பொருத்தமான புள்ளியியல் கருவிகளை பயன்படுத்தி சோதனை செய்வது மிக அவசியமாகும். அவ்வாறு இல்லை எனில், கருதுகோள்களை உருவாக்குவதனால் எவ்வித பயனுமில்லை. மேற்கண்ட செயல்முறையில், தகவல்களை பகுப்பாய்வு செய்ய வேண்டும் என்று பார்த்தோம். அப்பகுதியிலேயே இந்த கருதுகோள்களை சோதனை செய்யும் புள்ளியியல் கருவிகளை தேர்ந்தெடுத்து அவற்றை பயன்படுத்தி புள்ளியியல் முடிவுகளை பெற வேண்டும். இம்முடிவுகளை கொண்டு நாம் உருவாக்கிய கருதுகோள்கள் ஏற்றுக்கொள்ளப்படுகிறதா அல்லது அக்கருதுகோள்கள் நிராகரிக்கப்படுகிறதா என்பதை தெரியப்படுத்த வேண்டும். இதற்கென பல்வேறு புள்ளியியல் கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன, அவற்றுள் சில, கை-ஸ்கொயர், டி-சோதனை, எ.ஃ.ப்-சோதனை ஆகியவையாகும். இவ்வாறாக கருதுகோள்களை சோதனை செய்யும்போது ஆராய்ச்சியாளர் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட கருவிகளை பயன்படுத்திக்கொள்ளலாம். இது அந்த ஆராய்ச்சியின் தன்மை, நோக்கம், ஆராய்ச்சியாளர் செய்யும் விசாரனை ஆகியவற்றை பொருத்ததாகும்.

## 3.4.10. முடிவுகளை விளக்குதல் (Interpretation)

ஆராய்ச்சி செயல்முறைகளின் மிக முக்கியமான ஒரு செயல்முறையானது, ஆராய்ச்சி முடிவுகளை விளக்குவதாகும். மேற்கண்ட செயல்முறைகளில் ஆராய்ச்சிக்கான தகவல்களை பகுப்பாய்வு செய்யவேண்டும் என்பதை கண்டோம். இவற்றுள் ஆராய்ச்சி முடிவுகளை கணித அடிப்படையில் பெறமுடியும், இவற்றை கொண்டு இத்துறையில் தேர்ந்தவர்கள் மட்டுமே முடிவுகளை புரிந்துகொள்ள இயலும். எனினும் ஒரு ஆராய்ச்சியின் முடிவானது அனைத்து தரப்பினருக்கும் புரியும் விதமாக இருத்தல் வேண்டும். எனவே, ஆராய்ச்சியாளர் தான் பெற்ற ஆராய்ச்சி முடிவுகளை முறையாக விவரித்தல் வேண்டும். இச்செயல்முறையில் ஆராய்ச்சியாளர், பெறப்பட்ட புள்ளியியல் முடிவுகளை ஒவ்வொன்றாக விளக்கி அது ஏன் பெறப்பட்டது, அதன் பொருள், அதன் தாக்கம், மாறிலிகளுக்கிடையேயான உறவுகள் போன்றவற்றை தெளிவாக விளக்குதல் வேண்டும். இவ்வாறு செய்வது ஆராய்ச்சி அறிக்கையை படிப்பவர்களுக்கு எவ்வித குழப்பமும் இன்றி

எளிதாக புரிந்துகொள்ளும் வகையில் அமையும். சில ஆராய்ச்சிகளில் ஆராய்ச்சி முடிவுகள் முன்னர் உள்ள சில கோட்பாடுகள் பற்றியதாக இருக்கலாம், அவ்வாறு இருக்கிறது எனில், ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சி முடிவுகள் அக்கோட்பாடுகளுக்கு ஒத்துபோகின்றனவா அல்லது அக்கோட்பாடுகளிலிருந்து விலகி போகின்றனவா போன்றவற்றை தெளிவாக எடுத்து கூற வேண்டியது அவசியமாகும். இவ்வாறான விளக்கவுரை எதிர்காலத்தில் பல ஆராய்ச்சிகளுக்கு வித்திருகிறது.

## 3.4.11. ஆராய்ச்சி அறிக்கை தயார் செய்தல் (Preparation of Research Report)

மேற்கண்ட ஆராய்ச்சி செயல்முறைகளை மேற்கொண்டபின்னர், ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சி அறிக்கையை தயார் செய்ய வேண்டும். இது ஆராய்ச்சி செயல்முறையில் மிக முக்கியமான ஒன்றாகும். அந்த அறிக்கையில் அவ்வாராய்ச்சியாளர் அவர் மேற்கொண்ட ஆராய்ச்சியில் என்னென்ன செய்தார் எப்படி செய்தார் என்பதை விளக்கமாக அளிக்க வேண்டும். ஆராய்ச்சி அறிக்கையை தயார் செய்யும்போது ஆராய்ச்சியாளர் மிக கவனமாக இருத்தல் வேண்டும். ஏனெனில் எவ்வளவுதான அவர் திறம்பட ஆராய்ச்சியை மேற்கொண்டிருந்தாலும், ஆராய்ச்சி அறிக்கையில் அவற்றை முறையாக சொல்லவில்லை என்றால் அவர் செய்த ஆராய்ச்சி வீணானதாகிவிடும். அவ்வாறு ஆராய்ச்சியாளர் தயார் செய்யும் ஆராய்ச்சி அறிக்கை முக்கியமாக மூன்று பாகங்களை கொண்டிருத்தல் வேண்டும். அதாவது ஒன்று, பூர்வாங்க பகுதி (Preliminary part), இரண்டாவதாக, முக்கிய பகுதி (Main Part) மற்றும் மூன்றாவதாக, இறுதிப் பகுதி (End Part).

இதில் பூர்வாங்க பகுதியில் அவ்வாராய்ச்சியின் தலைப்பு, நன்றியறிவித்தல், உள்ளடக்கம் போன்ற பகுதிகள் அடங்கியுள்ளன.

முக்கிய பகுதியில் கீழ்கண்டவை ஆராய்ச்சி அறிக்கையில் அடங்கியுள்ளன.

**(அ) அறிமுகம்**

இப்பகுதியில், ஆராய்ச்சியாளர் தான் மேற்கொண்ட ஆராய்ச்சியை பற்றிய கருத்துருக்கள், கோட்பாடுகள், அவ்ஆராய்ச்சி மேற்கொண்டதறாகான காரணம், நியாயம், ஆராய்ச்சி பிரச்சனைகள், ஆராய்ச்சி குறிக்கோள்கள், ஆராய்ச்சி வடிவமைப்பு போன்றவற்றை தெளிவாக விவரித்தல் வேண்டும். பொதுவாக அறிமுகத்தை படித்தவுடன் ஒருவர் அவ்வாராய்ச்சி அறிக்கையில் என்ன ஆராய்ச்சி செய்யப்பட்டுள்ளது என்பதை ஊகிக்கும் விதமாக அறிமுகம் இருத்தல் அவசியம்.

### (ஆ) ஆராய்ச்சி முடிவுகள்

குறிப்பு

இப்பகுதியில் ஆராய்ச்சியாளர் தான் பகுப்பாய்வு செய்த முடிவுகள் அவற்றின் விளக்கங்கள் ஆகியவற்றை விளக்க வேண்டும். இவற்றை விளக்கும்போது பொதுவாக அவர் தொழில்நுட்பம் சாராத வார்த்தைகளை பயன்படுத்துவது சிறந்ததாகும், இவ்வாறு செய்வதனால் அனைவருக்கும் அந்த ஆராய்ச்சி அறிக்கை புரியும் விதத்தில் அமையும். இப்பகுதியில் ஆராய்ச்சியாளர் ஆராய்ச்சி முடிவுகளுடன் ஆராய்ச்சி தொடர்பாக அவரின் பரிந்துரைகளும் இடம்பெற வேண்டும். ஆராய்ச்சி அறிக்கையானது முறையாக சரியான வரிசையில் அமைதல் வேண்டும்.

### (இ) முடிவுரை

ஒரு ஆராய்ச்சிக்கு முடிவுரை என்பது மிக அவசியமான ஒன்றாகும். இப்பகுதியில் ஆராய்ச்சியாளர் தான் மேற்கொண்ட ஆராய்ச்சியில் அவர் கண்டுபிடித்ததை மிகச்சுருக்கமாக தெரிவித்து இவ்வாராய்ச்சி அறிக்கையை முடித்தல் வேண்டும்.

மூன்றாவதாக, ஆராய்ச்சி அறிக்கையின் இறுதிப்பகுதியில் ஆராய்ச்சியாளர் அனைத்து தொழில்நுட்பம் சார்ந்த தகவல்கள், அவர் அவ்வாராய்ச்சிக்காக படித்த புத்தகங்கள் மற்றும் இதர அறிக்கைகளின் தொகுப்பு, அவர் தகவல் திரட்டுவதற்காக பயன்படுத்திய வினாப்பட்டியல் போன்றவற்றை தருதல் வேண்டும்.

## 3.5. தூண்டல் மற்றும் விலக்கல் (Induction and Deduction)

தூண்டல் மற்றும் விலக்கல் என்கிற பதங்கள் ஒரு ஆய்வு அறிக்கையை தயார்செய்யும்போது ஆராய்ச்சியாளர் எழுதும் வாதத்தின்போது பயன்படுத்தப்படுகிறது. இது ஆராய்ச்சி அறிக்கையை படிப்பவர்களை சமாதானம் செய்யும் விதமாக இருக்கிறது. இதில் தூண்டல் மற்றும் விலக்கல் என்கிற இரண்டு வகையுண்டு.

தூண்டல் என்பது ஆராய்ச்சியாளர் குறிப்பிடத்தகுந்த முடிவுகளை ஒரு கோட்பாடுகளை உருவாக்கும் விதமாகவோ அல்லது அந்த முடிவுகளை பொதுமைப்படுத்தியோ வாதப்படுத்துவதை குறிக்கிறது. இவ்வகை வாதங்களை மேற்கொள்ளும் ஆராய்ச்சிகளில், கோட்பாடுகளை அடிப்படையாக கொண்டு கருதுகோள்கள் உருவாக்கப்படுகின்றன பிறகு அவை முறையாக சோதனையிடப்பட்டு முடிவுகள் பெறப்பட்டு அதற்கேற்றார்போல ஆராய்ச்சி வாதங்கள் மேற்கொள்ளப்படுகின்றன.

விலக்கல் என்கிற வகையில், ஆராய்ச்சி முடிவுகள் பொதுப்படையானவை கொண்டு குறிப்பிடத்தகுந்த வகையில் எழுதுவதாகும். இது தூண்டல் என்கிற வகையில் செய்யப்படும் வாதத்திற்கு நேர் எதிரானதாகும். வேறு வகையில் கூறுவதாயின்.

இவ்வகை வாதங்களில், பொதுவான உண்மைகள் அல்லது முடிவுகளை கொண்டு ஒரு குறிப்பிட்ட நபர் அல்லது குழு அல்லது அலகிற்கு அந்த முடிவினை பொருந்தக்கூடியதாக வாதம் செய்வதாகும்.



## 3.6. சுருக்கம்

சமூக அறிவியல் என்பது சமுதாயம் மற்றும் அவற்றுள் உள்ள நபாகளுக்கிடையேயான உறவுகளை படிப்பதாகும். சமூக அறிவியல் பாடத்தில் வியாபாரம், சமூகவியல், வணிகவியல், மக்கள்தொகையியல், அரசியல் அறிவியல், வரலாறு போன்ற பல வகையான பாடங்கள் அடங்கும். இவ்வகை பாடங்களில் மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சியானது சமூக அறிவியல் ஆராய்ச்சி என்று அழைக்கப்படுகிறது. சமூக அறிவியல் ஆராய்ச்சியானது மருத்துவத்துறை முதற்கொண்டு அனைத்துவகையான துறைகளுக்கும் முக்கியத்துவம் வாய்ந்ததாக பெரும் பங்களிப்பை செய்கிறது. சமூக அறிவியல் பாடத்தில் மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சிக்கென ஒரு செயல்முறை உள்ளது. அதை முறையாக பின்பற்றினால் ஆராய்ச்சியை திறம்பட செய்து முடிக்கமுடியும். அச்செயல்முறையானது, ஆராய்ச்சி பிரச்சனையை வகுத்தல் (Formulation of Research Problem), ஆய்வு முன்னோடிகள் (Review of Literature), கருதுகோள்களை உருவாக்குதல் (Formulating Hypotheses), ஆராய்ச்சி வடிவமைப்பை தயார் செய்தல் (Preparing Research Design), மாதிரி வடிவமைப்பை தீர்மானித்தல் (Determination of Sample Design), தகவல் திரட்டுதல் (Data Collection), ஆராய்ச்சியை மேற்கொள்ளுதல் (Execution of Research), தகவல்களை பகுப்பாய்தல் (Data Analysis), கருதுகோள்களை சோதனை செய்தல் (Testing Hypotheses), முடிவுகளை விளக்குதல் (Interpretation) மற்றும் ஆராய்ச்சி அறிக்கை தயார் செய்தல் (Preparation of Research Report). தூண்டல் என்பது ஆராய்ச்சியாளர் குறிப்பிடத்தகுந்த முடிவுகளை ஒரு கோட்பாடுகளை உருவாக்கும் விதமாகவோ அல்லது அந்த முடிவுகளை பொதுமைப்படுத்தியோ வாதப்படுத்துவதை குறிக்கிறது. விலக்கல் என்கிற வகையில், பொதுவான உண்மைகள் அல்லது முடிவுகளை கொண்டு ஒரு குறிப்பிட்ட நபர் அல்லது குழு அல்லது அலகிற்கு அந்த முடிவினை பொருந்தக்கூடியதாக வாதம் செய்வதாகும்.

## 3.7 புரிதலை சோதிக்கும் வினாக்கள்

1. சமூக அறிவியல் ஆராய்ச்சி என்பதன் பொருள் யாது?
2. சமூக அறிவியல் ஆராய்ச்சியின் முக்கியத்துவத்தை விளக்குக.
3. வியாபார ஆராய்ச்சி என்பதன் பொருள் யாது?
4. சமூக அறிவியல் ஆராய்ச்சியின் செயல்முறைகளை பட்டியலிடுக.

5. ஆய்வு முன்னோடிகள் குறித்து குறிப்பு வரைக.
6. கருதுகோள் என்பதன் பொருள் யாது?
7. தகவல்களின் வகைகளை சுருக்கமாக விளக்குக.
8. தூண்டல் மற்றும் விலக்கல் ஆகியவற்றுக்கிடையேயான வேறுபாட்டினை எழுதுக.

குறிப்பு

## 3.8. பயிற்சி வினாக்கள்

1. ஏதேனும் ஒரு சமூக அறிவியல் பாடத்தில் ஆராய்ச்சி பிரச்சனையை எவ்வாறு வகுப்பாய் என்பதை தகுந்த உதாரணத்துடன் விளக்குக.
2. ஒரு ஆராய்ச்சி அறிக்கையை தயார் செய்வதை விவாதி.

## 3.9. மேலும் பயில புத்தகங்கள்

Kothari C.R., Research Methodology – Methods and Techniques, New Age International (P) Limited Publishers, New Delhi, 2004.

Priti R Majhi and Prafull K Khatua Research Methdology (Concepts, Methods, Techniques and SPSS), Himalaya Publishing House, Mumbai, 2015.

# அலகு – 4:

# ஆராய்ச்சித் திட்டம்

### ஆராய்ச்சித் திட்டம்

4.1. ஆராய்ச்சித் திட்டம் – அறிமுகம்

4.2. ஆராய்ச்சி பிரச்சனை (Research Problem)

4.3. ஆராய்ச்சி பிரச்சனை என்பது என்ன? (What is a Research Problem?)

4.4. ஆராய்ச்சி பிரச்சனையின் கூறுகள் (Components of Research Problem)

## 4.1. ஆராய்ச்சித் திட்டம் – அறிமுகம்

ஒரு சமூக அறிவியல் ஆராய்ச்சியை தொடங்குவதற்கு முன்னர், ஆராய்ச்சியாளர் தமது ஆராய்ச்சியை முறையாக திட்டமிட்டுக்கொள்வது அவசியம். இவ்வாறு செய்வது அவர் தனது ஆராய்ச்சியை எவ்வித தங்குதடையின்றி திறம்பட செய்வதற்கு உதவியாக இருக்கும். நாம் சென்ற பாடத்தில் பார்த்தது போல ஒரு ஆராய்ச்சியாளர் தமது ஆராய்ச்சியில் தனது ஆராய்ச்சி பிரச்சனையை வகுத்துக்கொள்வது முதல் ஆராய்ச்சி முடிந்த பின்னர் அவ்வாராய்ச்சியை அறிக்கையாக தயார்செய்வது வரை அவர் தனது ஆராய்ச்சியை முறையாக திட்டமிட்டுக்கொள்ள வேண்டும். இந்த பாடத்தில் நாம் ஆராய்ச்சி பிரச்சனைகள், அவற்றை எவ்வாறு கண்டறிவது, எவ்வாறு வகுத்துக்கொள்வது, அப்பிரச்சனைகளை எவ்வாறு தேர்ந்தெடுத்துக்கொள்வது மற்றும் ஆராய்ச்சி முன்னோடிகள் ஆகியவற்றை பற்றி விரிவாக பார்ப்போம்.

## 4.2. ஆராய்ச்சி பிரச்சனை (Research Problem)

ஒரு ஆராய்ச்சியை மேற்கொள்ளும்போது உள்ள செயல்முறைகளில் முதலாவது மற்றும் மிக முக்கியமான செயல்முறையானது ஆராய்ச்சி பிரச்சனையை தேர்ந்தெடுப்பது மற்றும் அப்பிரச்சனையை வரையறுப்பதாகும். முதலில் ஆராய்ச்சியாளர் ஆராய்ச்சி பிரச்சனையை கண்டறிதல் வேண்டும் பிறகு அப்பிரச்சனையை தனது ஆராய்ச்சிக்கு ஏற்றவாறு வகுத்துக்கொள்ளுதல் வேண்டும். ஒரு மருத்துவர் எவ்வாறு ஒரு நோயின் அறிகுறிகளை தெரிந்துகொள்கிறாறோ அது போல ஆராய்ச்சியாளர் அவராலோ அல்லது மற்றோர்களாலோ கண்டறியப்பட்ட ஆராய்ச்சி பிரச்சனை தொடர்பான அறிகுறிகளை

அறிந்துகொள்ள வேண்டும், பிறகே அவரால் ஆராய்ச்சி செய்து துல்லியமான முடிவுகளை எட்ட முடியும். ஆராய்ச்சி பிரச்சனைகளை ஆராய்ச்சியாளர் அவர் பாடம் தொடர்பான பல்வேறு ஆராய்ச்சி கட்டுரைகளை தொடர்ந்து படிப்பது, நாளேடுகளை படிப்பது, ஆராய்ச்சி தொடர்பான கருத்தரங்கள் போன்றவற்றில் பங்கேற்பது போன்றவற்றின் வாயிலாக பிரச்சனைகளை கண்டறிவது இலகுவாக இருக்கும். இவ்வாறு ஆராய்ச்சி பிரச்சனையை முறையாக கண்டறிந்து அதை வரையறுத்துக்கொள்வது, ஆராய்ச்சியாளரின் ஆராய்ச்சி தொடர்பான இதர செயல்முறைகளுக்கு எளியதாகவும் ஆராய்ச்சியை திறம்பட செய்யவும் பயனளிக்கிறது.

குறிப்பு

## 4.3. ஆராய்ச்சி பிரச்சனை என்பது என்ன? (What is a Research Problem?)

ஆராய்ச்சி பிரச்சனை என்பது ஒரு ஆராய்ச்சியாளர் தமது அனுபவத்தில் ஏதேனும் கோட்பாட்டிலோ அல்லது நடைமுறையிலோ சந்திக்கும் கடினத்தன்மையும் அதற்கு அவர் தகுந்த தீர்வு தருவதற்கு தின்னமாயிருக்கிறார் எனில் அது ஆராய்ச்சி பிரச்சனை என்று அழைக்கப்படுகிறது. பொதுவாக நாம் ஒரு ஆராய்ச்சி பிரச்சனை என்பது கீழ் கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட்டு ஏற்கனவே நிலவுவது என்று கருதுகிறோம்.

(அ) ஆராய்ச்சி பிரச்சனையானது ஒரு தனி நபர் அல்லது ஒரு குறு அல்லது ஒரு நிறுவனம் ஆகியவற்றுடன் தொடர்புடையதாக இருத்தல் வேண்டும். அந்த தனி நபர் அல்லது நிறுவனம் ஆகியவை சூழலலை கொண்டிருக்கவேண்டும், அதாவது ‘A’ என்கிற சூழல் மற்றும் அது ‘B’ என்கிற சார்ந்திராத மாறிலிகளால் வரையறுக்கப்பட வேண்டும்.

(ஆ) அங்கு குறைந்தபட்சம் இரண்டு நடவடிக்கைகளின் தொகுப்பு இத்தல் அவசியம், அந்நடவடிக்கைகளை நாம் ‘$C_1$’ மற்றும் ‘$C_2$’ எனலாம். ஒரு நடவடிக்கைகளின் தொகுப்பானது ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட சார்பு மாறிலிகளின் மதிப்பினால் வரையறுக்கப்பட வேண்டும். உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் ஒரு நுகர்வோர் வாங்கிய பொருட்களின் எண்ணிக்கை என்பது நடவடிக்கைகளின் தொகுப்பு எனலாம்.

(இ) அங்கு குறைந்தபட்சம் இரண்டு சாத்தியமான வெளிபாடுகள் இருத்தல்வேண்டும். அதாவது மேற்கண்ட நடவடிக்கைகளின் தொகுப்பிலிருந்து விளையும் வெளிபாடுகளை ‘$O_1$’ மற்றும் ‘$O_2$’ எனலாம். எனினும் இதில் ஒன்று மற்றொன்றைவிட முக்கியத்துவம் பெருவதாக இருக்கும். வேறு வகையில் கூறுவதாயின், இவற்றில்

*Self-Instructional Material*

ஒன்று ஆராய்ச்சியாளருக்கு தேவையான ஒன்றாக இருத்தல் வேண்டும், அதாவது நோக்கம்.

குறிப்பு

(ஈ) இந்த நடவடிக்கைகளின் தொகுப்பானது ஆராய்ச்சியாளரின் ஆராய்ச்சி நோக்கத்தை பெறவதற்கு ஒரு வாய்ப்பளித்தல் வேண்டும். ஆனால், அந்த நடவடிக்கைகளின் தொகுப்பானது வேறு ஒரு நோக்கத்தை பெறுவதற்கு வாய்ப்பளித்தல் கூடாது, இல்லையெனில் அது விணானதாகிவிடும்.

## 4.4. ஆராய்ச்சி பிரச்சனையின் கூறுகள் (Components of Research Problem)

மேற்கண்ட விளக்கங்களை கொண்டு நாம் ஒரு ஆராய்ச்சி பிரச்சனைக்கு பல கூறுகள் உள்ளன என்பதை அறியலாம். அக்கூறுகள் பின்வருமாறு,

(அ) அங்கு ஒரு நபர் அல்லது ஒரு குழு அல்லது ஒரு நிறுவனம் இருத்தல் வேண்டும். மேலும் அவற்றுக்கு ஏதேனும் ஒரு பிரச்சனை அல்லது கடினத்தன்மை இருத்தல் அவசியம்.

(ஆ) அங்கு சில ஆராய்ச்சி நோக்கங்கள் பெறப்படுதல் வேண்டும். ஏதும் நோக்கங்கள் பெறப்படவில்லை என்றால் அங்கு பிரச்சனை எதுவும் இல்லை என்று பொருள்.

(இ) அங்கு ஒரு மாற்று (நடவடிக்கைகளின் தொகுப்பு) இருத்தல் அவசியம், அவ்வாறு மாற்று இருக்கும் பட்சத்தில் ஆராய்ச்சியாளர் தனது விருப்பத்திற்கு நோக்கங்களை தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம். அதாவது, ஆராய்ச்சியாளருக்கு குறைந்தபட்சம் இரண்டு மாற்றுகள் இருத்தல் வேண்டும், அவ்வாறு இல்லை என்றால் அங்கு பிரச்சனை எதுவும் இல்லை என்று பொருள்கொள்ளலாம்.

(ஈ) அந்த மாற்றுகளை தேர்ந்தெடுத்துக்கொள்வதில் இன்னமும் ஆராய்ச்சியாளருக்கு தனது மனதில் சந்தேகம் இருத்தல் அவசியம். அதாவது, சாத்தியமான மாற்றுகளின் திறன் தொடர்பான கேள்விகளுக்கு ஆராய்ச்சியாளர் பதில் கொண்டிருத்தல் அவசியம்.

(உ) கடினத்தன்மை இருப்பதற்கு அங்கு ஏதேனும் சூழல் அல்லது சூழல்கள் இருத்தல் அவசியம்.

எனவே, ஒரு ஆராய்ச்சி பிரச்சனை என்பது ஆராய்ச்சியளருக்கு அப்பிரச்சனைக்கு சிறந்த தீர்வை பெறுவதற்கு அவசியமாக உள்ளது. அதாவது, கொடுக்கப்பட்ட சூழலில் எந்த நடவடிக்கைகளின் தொகுப்பானது நோக்கங்களை அடைவதற்கு உதவும் என்பதை கண்டறியலாம். ஒரு ஆராய்ச்சி பிரச்சனையை

கடினத்தன்மையாக்குவதற்கு பல்வேறு காரணிகள் காரணமாயிருக்கின்றன. உதாரணமாக, சூழலில் ஏற்படும் மாற்றங்கள், நடவடிக்கைகளின் திறனில் மாற்றத்தை ஏற்படுத்தலாம், வெளியீடுகளின் மதிப்பில் மாற்றங்களை ஏற்படுத்தலாம், மாற்று நடவடிக்கைகளின் தொகுப்பின் எண்ணிக்கை அதிகமாயிருக்கலாம், இதனால் முடிவினை எடுப்பதில் தொடர்பில்லாத நபரை பாதிக்கலாம், இது போன்ற பல காரணிகளில் பாதிப்பை ஏற்படுத்தலாம். அனைத்து கூறுகளுமோ அல்லது முக்கியமான ஒன்றையோ ஆராய்ச்சி பிரச்சனை என்று எடுத்துக்கொள்ளலாம்.

குறிப்பு

## 4.5. பிச்சனையை தேர்வுசெய்தல் (Selection of Problem)

ஒரு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்படும் பிரச்சனையானது மிக கவனமாக தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இந்த பணியானது மிக கடினமான ஒன்றாகும். ஆனால் மேலோட்டமாக பார்க்கும்போது இப்பணி அவ்வளவு கடினமானது என்று தோன்றாது. இது தொடர்பாக ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ச்சி வழிகாட்டியின் உதவியை நாடலாம். இருப்பினும், ஒவ்வாரு ஆராய்ச்சியாளரும் தானே தனது அனுபவத்தின் வாயிலாக ஆராய்ச்சி பிரச்சனையை தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டுமே தவிர இதை மற்றவர்களிடமிருந்து பெறுதல் கூடாது. மரங்கள் அதன் விதையிலிருந்து உருவாவது போன்று ஆராய்ச்சி பிரச்சனைகள் ஆராய்ச்சியாளரின் மனதில் தோன்றுதல் வேண்டும். உதாரணமாக நாம் ஒரு கண்மருத்துவரை அணுகி பார்வைக்கு கண்ணாடி வேண்டும் என்று கேட்கிறோம் என்றால், நமக்கு பொருத்தமான கண்ணாடி எது என்பதை அந்த மருத்துவர் மட்டுமே முடிவு செய்தல் இயலாத ஒன்றாகும், நாம் அவருக்கு ஒத்துழைப்பு கொடுப்பதன் மூலமாகவே நமக்கு மிகவும் பொருத்தமான கண்ணாடியை பெற்று நாம் பார்வை சிற்ப்பாக பெற முடியும். எனவே, ஒரு ஆராய்ச்சி வழிகாட்டியானவர், ஆராய்ச்சியாளருக்கு ஆராய்ச்சி பிரச்சனையை தேர்ந்தெடுத்துக்கொள்ள வழிகாட்ட முடியுமே தவிர அவரே ஆராய்ச்சி பிரச்சனையை தருவது நன்றன்று. எனினும், ஒரு ஆராய்ச்சியாளர் தான் மேற்கொள்ளவிருக்கும் ஆராய்ச்சிக்கான பாடத்தை தேர்ந்தெடுப்பதற்கு அல்லது ஆராய்ச்சி பிரச்சனையை தேர்ந்தெடுத்துக்கொள்வதற்கு பின்வரும் கருத்துகளை மனதில் கொள்ள வேண்டும்.

(அ) பொதுவாக ஏற்கனவே ஒரு பாடத்தில் அல்லது துறையில் அதிகபடியான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன என்றால் அதை தேர்வு செய்யாமல் இருப்பது நலம். ஏனெனில் அவ்வாறான பாடங்களில் அல்லது துறைகளில் நாம் புதிய பிரச்கனைகளையோ அல்லது புதிய வகையிலான ஆராய்ச்சியையோ மேற்கொள்வது கடினமானதாகும்.

(ஆ) ஒரு சராசரி ஆராய்ச்சியாளர் சர்ச்சைக்குரிய பாடங்களை தனது ஆராய்ச்சிக்கு தேர்ந்தெடுத்துக்கொள்ளக் கூடாது.



(இ) மிகவும் குறுகிய அல்லது மிகவும் தெளிவில்லாத ஆராய்ச்சி பிரச்சனைகளை தேர்ந்தெடுப்பதை தவிர்க்க வேண்டும்.

(ஈ) தேர்ந்தெடுக்கப்படும் ஆராய்ச்சிக்கான பாடம் ஆராய்ச்சியாளருக்கு பரிச்சயமான ஒன்றாக இருத்தல் வேண்டும், அப்போதுதான் அவரால் அதன் கருத்துக்கள் மற்றும் கோட்பாடுகளை எளிதில் புரிந்துகொள்ள முடியும் மற்றும் ஆராய்ச்சிக்கு தேவையான தகவல்கள் மற்றும் பலவற்றை சேகரிக்க முடியும். அவ்வாறாக தேர்ந்தெடுத்துக்கொண்ட பிறகும் சில ஆராய்ச்சியாளர்களுக்கு ஆராய்ச்சியை மேற்கொள்ளும்போது கடினம் ஏற்படலாம், அப்போது அவர்கள் அந்த துறையில் சிறப்பாய் ஆராய்ச்சி செய்தவர்கள் அல்லது பல்கலைக்கழக பேராசிரியர்கள் போன்றோரை தொடர்புகொண்டு அவர்களின் உதவியை நாடலாம். மேலும் ஆராய்ச்சியாளர் இக்கடினத்தன்மையை போக்குவதற்கு, நடப்பில் இந்த ஆராய்ச்சி தொடர்பாக வெளியாகும் ஆராய்ச்சி கட்டுரைகளை கவனமாக படிப்பதன் வாயிலாக எவ்வாறு அந்த ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது என்பதை தெரிந்துகொள்ளலாம், மேலும் அவர் அந்த முறையை தமது ஆராய்ச்சிக்கு எவ்வாறு பயன்படுத்திக்கொள்ளலாம் என்பதையும் தெரிந்துகொள்ளலாம். ஆராய்ச்சியாளர் தான் தேர்ந்தெடுக்கும் ஆராய்சசி பிரச்சனையை தனது சக ஆராய்ச்சியாளர் அல்லது ஆராய்சசியில் ஆர்வமிக்கவர்களிடம் விவாதிக்கலாம். இவ்வகையிலெல்லாம் ஒரு ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சி பிரச்சனையை தேர்ந்தெடுத்துக்கொள்ள அனைத்துவிதமான முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டும்.

(உ) ஒரு ஆராய்ச்சி பிரச்சனையை தேர்ந்தெடுக்கும்போது ஆராய்ச்சியாளர், தேர்ந்தெடுக்கப்படும் பாடம், ஆாய்ச்சியாளரின் தகுதி, ஆராய்ச்சியாளரின் பயிற்சி, எதிர்பார்க்கப்படும் செலவு, ஆராய்ச்சி காலம், போன்ற மேலும் பல காரணிகளை கருத்தில் கொள்ள வேண்டும். அதாவது ஆராய்ச்சியாளர் இறுதியாக தனது ஆராய்ச்சி பிரச்சனைகளை தேர்ந்தெடுக்கும்போது கீழ் காணும் கேள்விகளை தனக்குள்ளே கேட்டுக்கொள்ள வேண்டும்.

- இந்த ஆராய்ச்சியை மேற்கொள்வதற்காக ஆராய்ச்சியாளருக்கு தேவையான தகுதி மற்றும் பின்புலம் உள்ளதா?
- எதிர்பார்க்கப்படும் செலவினத்திற்குள் இந்த ஆராய்ச்சி செய்து முடிக்கப்பட்டுவிடுமா?
- இந்த ஆராய்ச்சியில் தொடர்புடையவர்களிடமிருந்து தேவையான ஒத்துழைப்பு கிடைக்குமா?

(ஊ) ஒரு ஆராய்ச்சி பிரச்சனையை தேர்ந்தெடுத்த பிறகு அதற்கு முன்னோட்ட ஆராய்ச்சி என்பது தேவையான ஒன்றாகும். எனினும் அத்துறையில் ஏற்கனவே சில பல ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன எனில் அம்முன்னோட்ட ஆராய்ச்சி தேவையற்ற ஒன்றாகும்.

குறிப்பு

இவ்வாறாக ஒரு ஆராயச்சியாளர் தனது ஆராய்சி பிரச்சனையை தேர்ந்தெடுத்துக்கொள்வதில் கவனமாக இருத்தல் வேண்டும். மேற்கண்டபடி ஆராய்ச்சியாளர் ஆராய்ச்சி பாடம் மற்றும் ஆராய்ச்சி பிரச்சனையை தேர்ந்தெடுத்துக்கொண்ட பிறகு, அவர் மேற்கொள்ளவிருக்கும் ஆராய்ச்சியில் கடினத்தன்மை குறையும்.

## 4.6. பிரச்சனையை வரையறுத்தல் (Defining the Problem)

பொதுவாக அனுபவம் வாய்ந்த ஆராய்ச்சியாளர்கள் கூறுவது, ஒரு ஆராய்ச்சி பிரச்சனையை தெளிவாக வரையறுத்துவிட்டாலே ஆராய்ச்சியில் பாதி பிரச்சனை முடிவுக்கு வருகிறது. இந்த அறிக்கை நாம் ஆராய்ச்சி பிரச்சனையை வரையறுப்பதன் முக்கியத்துவத்தை தெரிவிக்கிறது. அவ்வாறான ஆராய்ச்சி பிரச்சனை ஆராய்ச்சியாளரால் சந்தேகத்திற்கு இடமின்றி வரையறுக்கப்படுதல் வேண்டும், இது தகவல்களில் ஆராய்ச்சியுடன் தொடர்புடைய தகவல்களை தொடர்பில்லாத தகவல்களுடன் வேறுபடுத்த முடியும். இவ்வாறாக ஆராய்ச்சி பிரச்சனையை வரையறுக்கும்போது, அது ஆராய்ச்சியாளரை ஆராய்ச்சியில் சரியான பாதையில் செல்ல பங்களிக்கிறது, சரியாக வரையரை செய்யப்படாத பிரச்சனை ஆராய்ச்சியாளருக்கு ஆராய்ச்சி மேற்கொள்ளும்போது பல இடையூறுகளை அளிக்கிறது. ஆராய்ச்சி பிரச்சனையை சரியாக வரையறுத்த ஒரு ஆராய்ச்சியாளரால்தான் கீழ்காணும் ஆராய்ச்சி தொடர்பான கேள்விகளை மனதில் நிறுத்தி அதற்கு விடை காண முடிகிறது. அக்கேள்விகளாவன, எந்தெந்த தகவல்கள் திரட்டப்பட வேண்டும்? தகவலின் எந்தெந்த பன்புகள் இவ்வாராய்ச்சிக்கு தொடர்புடையன? மாறிலிகளுக்கிடையே என்ன உறவுகள் வெளிப்படுத்தப்பட வேண்டும்? ஆராய்ச்சிக்கு என்னென்ன நுட்பங்கள் பயன்படுத்தப்பட வேண்டும்? மற்றும் இதுபோல கேள்விகளுக்கு ஆராய்ச்சியாளர் பதிலளிக்க முடியும். எனவே ஒரு ஆராய்ச்சியை ஆரம்பிப்பதற்கு முன்னர் ஆராய்ச்சி பிரச்சனையை வரையறுத்துக்கொள்வது என்பது அவசியமாகும் மேலும் இதற்கு அதிகபடியான கவனத்தை அவ்வாராய்ச்சியாளர் தரவேண்டும். ஒரு பிரச்சனையை வகுப்பது என்பது அதற்கான தீர்வை காண்பதை காட்டிலும் மிக முக்கியமானதாகும். இவ்வாறு செய்வது ஆராய்ச்சியின் இதர செயல்முறைகளை ஆராய்ச்சியாளருக்கு எளிமையாக்குகிறது.

## 4.7. ஆராய்ச்சி பிரச்சனையை வரையறுப்பதன் நுட்பங்கள் (Techniques in Defining a Research Problem)

குறிப்பு

நாம் மேற்கண்ட பத்தியில் ஆராய்ச்சி பிரச்சனையை வரையறுத்தல் பற்றி பார்த்தோம். ஆராய்ச்சி பிரச்சனையை வரையறுத்தல் என்பது மேலோட்டமாக பார்த்தால் எளிமையான பணியாக தோன்றினாலும், அது ஒரு கடுமையான பணியாகும். ஆராய்ச்சியாளர் தான் கண்டறிந்த ஆராய்ச்சி பிரச்சனையை குறிப்பிட்ட எல்லைக்குள் வரையறுக்க வேண்டும். இவ்வாறு செய்யும்போது ஆராய்ச்சியாளர் அதற்குள் ஆராய்ச்சி நோக்கங்களை வரையறுத்து ஆராய்ச்சியை மேற்கொள்ள முடிகிறது. இவ்வாறாக ஆராய்ச்சி பிரச்சனையை வரையறுக்கும்போது அவசரமாக செய்யாமல் கவனமாக செய்தல் வேண்டும். அவ்வாறு இல்லை எனில் ஆராய்ச்சியாளர் ஆராய்ச்சியை மேற்கொள்ளும் போது பல்வேறு இடையூறுகளை எதிர்கொள்ளவேண்டிவரும். எனவே ஆராய்ச்சி பிரச்சனையானது முறையாக வரையறுக்கப்பட வேண்டும். இது தொடர்பான அனைத்துவிதமான கருத்துக்களுக்கும் போதுமான கவனம் செலுத்துதல் வேண்டும ஆராய்ச்சி பிரச்சனையை முறையாக வரையறுக்கும் நுட்பங்களை ஐந்து தலைப்புகளில் கீழ்வருமாரு காணலாம்.

பொதுவான வழியில் ஆராய்ச்சி பிரச்சனையின் அறிக்கை.

பிரச்சனையின் தன்மையினை புரிந்துகொள்ளல்

முன்னர் செய்யப்பட்ட ஆராய்ச்சிகளை தொகுத்தல்

விவாதம் வாயிலாக புதிய யோசனைகளை மேம்படுத்துதல்

ஆராய்ச்சி செய்வதற்கு ஏற்றாற்போல ஆராய்ச்சி பிரச்சனையை மறுபதிப்பு செய்தல்.

மேற்கண்ட நுட்பங்கள் கீழே சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளன.

ஒரு ஆராய்ச்சி பிரச்சனை தொடர்பாக ஆராய்ச்சியாளர் மற்றோரிடம் விவாதம் செய்யும்போது அவருக்கு புதிய தகவல்கள் மற்றும் யோசனைகள் கிடைக்கிறது. எனவே ஒரு ஆராய்ச்சியாளர் தாம் மேற்கொள்ளவிருக்கும் ஆராய்ச்சி தொடர்பான பிரச்சனையை தனது சக ஆராய்ச்சியாளர்கள் அல்லது ஏற்கனவே ஆராய்ச்சி மேற்கொண்ட ஆராயச்சியாளர்கள் அல்லது பேராசிரியர்கள் அல்லது ஆராய்ச்சி மேற்கொள்ளவிருக்கும் துறையில் தேர்ந்தவர்கள் அல்லது ஆராய்ச்சி வழிகாட்டி ஆகியோருடன் கலந்துரையாடல் செய்ய வேண்டும். இதற்கு அனுபவ கணக்கெடுப்பு (Experience Survey) என்று பெயர். இவ்வாறான கலந்துரையாடலில், ஆராய்ச்சியில் தேர்ந்த நபர்கள் ஆராய்ச்சியாளர் செய்யப்போகும் ஆராய்ச்சி தொடர்பாக தெரிவிக்கும் கருத்துகள், குறைகள், வரையறைகள், ஆலோசனைகள், விமர்சனங்கள், வழிகாட்டுதல்கள் ஆகியவை ஆராய்ச்சியாளருக்கு விலைமதிக்கமுடியதாக இருக்கிறது. இவ்வகை செயல்பாடுகள் ஆராய்ச்சியாளருக்கு ஏற்கனவே இவ்வாராய்ச்சி தொடர்பான அறிவை மேலும் கூர்தீட்டுவதாக இருக்கிறது. எனவே ஆராய்ச்சி தொடர்பான

விவாதம் என்பது ஆராய்ச்சியாளருக்கு தனது ஆராய்ச்சி பிரச்சனையை வரையறுப்பதில் மேலும் செம்மைப்படுத்துகிறது.



## 4.8 தகவல்களின் மதிப்பு மற்றும் அடக்கம்

இறுதியாக மேற்கண்ட செயல்பாடுகளை செம்மையாக முடித்த பின்னர் ஆராய்ச்சியாளர் தற்கதலிகமாக வகுத்துக்கொண்ட ஆராய்ச்சி பிரச்சனை வரையறையை மேலும் செம்மைப்படுத்துவதற்கு மறுபதிப்பு செய்ய வேண்டும். ஆராய்ச்சியாளர் முன்னதாக ஆராய்ச்சி பிரச்சனையை தெளிவாக புரிந்துகொண்டு, அதன் சூழல்களை அறிந்துகொண்டு, அது தொடர்பான கலந்துரையாடல்களை முறையாக செய்து, அது தொடர்பான முந்தய ஆராய்ச்சிகளை படித்து தெளிவு பெற்றுவிட்டார் எனில் ஆராய்ச்சியாளருக்கு ஆராய்ச்சி பிரச்சனையை வரையறை செய்ததை மறுபதிப்பு செய்வதில் எவ்வித சிரமமும் இல்லை.

தகவல்களின் மதிப்பு மற்றும் அடக்கமானது தகவல்களின் முக்கியத்துவம் மற்றும் அம்மொத்த தகவல்களை பெறுவதற்கு ஆகும் மொத்த செலவனை கணித்தலில் முக்கியப்பங்காற்றுகிறது.

**தகவல்களின் மதிப்பு**

மனித இனமானது தகவல்களின் முக்கியத்துவத்தினை அதிகமாக உணர்ந்துள்து. மனித இனத்தின் ஆரம்பகால நாகரிக வளர்ச்சியில் தகவல்கள் மற்றும் தகவல் பரிமாற்றங்களின் முக்கியத்துவத்தை உணர்ந்து அவற்றை மேம்படுத்தியும் வந்துள்ளது. நாம் தகவல்களுக்கு உள்ளுணர்வினால் எச்சரிக்கப்படுகிறோம். தகவல்கள் ஒவ்வொரு நிலையிரும் அதற்கென மதிப்புள்ளது இடை மனித மூளையானது மதிப்பீடு செய்கிறது. தகவல் என்பது ஏற்கனவே செயல்முறைபடுத்தப்பட்டு முடிவுகள் எடுக்க மற்றும் ஒரு நிறுவனத்தில் தகவல் தொடர்புகளுக்கு உதவுவதற்கு உதவி செய்கிறது. பொதுவாக தகவலானது, யார்?, என்ன?, எங்கே? மற்றும் எப்போது? என்கிற கேள்விகளுக்கு விடையளிக்கிறது. மனித மூளையானது தகவல்களை அதன் மதிப்பின் அடிப்படையில் முக்கியத்துவத்தை அளிக்கிறது.

ஒரு ஆராய்ச்சியின் முக்கியமான நோக்கமானது ஒரு பிரச்சனைக்கு முறையாக தீர்வினை வழங்குவதாகும். பொதுவாக ஒரு ஆராய்ச்சியில் தகவல்களின் முக்கிய நோக்கங்கள் கீழ்காண்பவைகளாக இருக்கலாம்.

- மனித இனம், சுற்றுசூழல் அல்லது இயற்கை போன்றவற்றைக்கான அறிவினை நீட்டிப்பது.
- நம் பொதுவான வாழ்க்கை நடைமுறையில் மேம்படுத்தப்படாத தகவல்களை அளிப்பது.

குறிப்பு

- முன்னர் கண்டறிந்த உண்மைகளை சரிபார்த்து அதில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை கண்டறிதல்.
- முக்கியமான மதிப்பீடுகளுக்கு கருத்துகளை உருவாக்குதல்.
- மாறிலிகளுக்கிடையேயான உள்-உறவுகளை பகுப்பாய்வு செய்து அவற்றை விளக்குவது.
- அறியப்படாத நிகழ்வுகளை ஆராய்வதற்கு நுனுக்கங்களையும் கருவிகளையும் மேம்படுத்துவது.
- திட்டமிடுதல் மற்றும் மேம்படுத்துதலில் உதவுதல்.
- இரண்டு மாறிலிகலுக்கிடையேயான சாதாரனமான உறவுகளை ஆராய கருத்துருகளை உருவாக்கி அவற்றை பகுப்பாய்வு செய்தல்.

**தகவல்களின் அடக்க விலை**

ஒரு தகவலின் அடக்க விலையானது அத்தகவலை பெறுவதற்கு செய்யப்பட்ட செலவுகளை குறிக்கும். ஒரு தகவலின் அடக்க விலை என்பது பின்வருவனவற்றை உள்ளடக்கியிருக்கும்.

- அத்தகவலை பெறுவதற்கு செய்யப்பட்ட செலவு.
- அத்தகவலை பராமரிப்பதற்கு செய்யப்பட்ட செலவு.
- அத்தகவலை உருவாக்குவதற்கு செய்யப்பட்ட செலவு.
- அத்தகவலை பரிமாற்றம் செய்வதற்கு செய்யப்பட்ட செலவு.

ஒரு தகவலின் அடக்க விலையானது அத்தகவலை உருவாக்குவதற்கு அல்லது அதை பெறுவதற்கான நிலையிலிருந்து கணக்கிடப்படும.

## 4.9 வணிக ஆராய்ச்சியில் ஆய்வு முன்னோடிகள்

ஒரு குறிப்பிட்ட பாடத்தில் இதற்கு முன்னர் உள்ள ஆராய்ச்சியாளர்கள் செய்த ஆராய்ச்சிகள் தொடர்பானவற்றை மதிப்பிட்டு, பாகுபடுத்தி அவற்றை விளக்கிக்கூறுவதே ஆராய்ச்சி முன்னோடியாகும். ஆராய்ச்சி முன்னோடி என்பது ஒரு ஆராய்ச்சி கட்டுரையின் ஒரு பகுதியாகும். எனினும் இது ஒரு தனி ஆவணமாக கொள்ளலாம். மேற்கண்ட எந்த ஒரு வகை ஆராய்ச்சி முன்னோடியாக இருந்தாலும் அதற்கு ஆராய்ச்சியாளருக்கு போதுமான ஆராய்ச்சி அறிவு இருத்தல் அவசியம். ஆராய்ச்சி முன்னோடி என்பது முன்னர் செய்த ஆராய்ச்சிகளை பற்றி மேலோட்டமாக எழுதுவது மட்டுமல்ல. இது ஒரு குறிப்பிட்ட பாடத்தில் முன்னர் செய்யப்பட்ட ஆராய்ச்சிகள் அனைத்தையும் கூறுவதும் அல்ல. மாறாக ஆராய்ச்சி முன்னோடி என்பது தற்போதய ஆராய்ச்சியின் குறிக்கோளின் அடிப்படையில் முன்னர் செய்யப்பட்ட ஆராய்ச்சிகளை தொகுத்து வழங்குவதாகும். ஒரு நல்ல ஆராய்ச்சி முன்னோடி என்பது பின்வரும் அம்சங்களை கொண்டிருக்க வேண்டும்.

- ஒரு குறிப்பிட்ட ஆராய்ச்சி பிரச்சனையில் பல்வேரு ஆராய்ச்சியாளர்களின் கருத்துகளை ஒப்பிடுதல்.
- ஒரே மாதிரியான முடிவுகளை தந்துள்ள ஆராய்ச்சியாளர்களை குழப்படுத்துதல்.
- ஆராய்ச்சி முறைகளை விளக்குதல் மற்றும் அறிதல்.
- எந்தெந்த பகுதிகளில் ஆராய்ச்சியாளர்கள் கருத்துகளோடு ஒத்துப்போகவில்லை என்பதை அறிதல்.
- முன்மாதிரியான ஆராய்ச்சிகளை முன்னிலைப்படுத்துதல்.
- ஆராய்ச்சிகளில் உள்ள ஆராய்ச்சி இடைவெளியை அறிதல்.

**ஒரு ஆராய்ச்சி முன்னோடியின் முக்கியமான பகுதிகளாவன,**

1. தற்போதய ஆராய்ச்சி துறையில் அல்லது பாடத்தில் இதற்கு முன்னர் ஆராய்ச்சியாளர்கள் செய்த ஆராய்ச்சிகளை பற்றிய ஒரு உருவரையை உருவாக்குதல்.
2. அவ்வாராய்ச்சிகளில் விடுபட்டுள்ள ஆராய்ச்சி இடைவெளியை கண்டறிதல்.

**பொருளாதார பாடத்தில் ஆராய்ச்சி முன்னோடிகள்**

பொருளாதார பாடத்தில் செய்யப்படும் ஆராய்ச்சிகளை கீழே தரப்பட்டுள்ளன.

- பொருளாதார வளர்ச்சி மற்றும் மேம்பாடு
- ஒரு அமைப்பு அல்லது தொழிலின் பொருளாதாரம் தொடர்பானவை
- பொருளாதார ஆராய்ச்சியலி கணிதவியல்
- பொருளாதார கொள்கை
- பொருளாதார கருத்துகள்
- சுற்றுசூழல் மற்றும் விவசாய பொருளாதாரம்
- நிதிசார்ந்த பொருளாதாரம்
- விளையாட்டு கோட்பாடு மற்றும் கணிதவியல் முறைகள்
- பொருளாதார கருத்துகளின் வரலாறு
- பன்னாட்டு பொருளாதாரம்
- சட்டம் மற்றும் பொருளாதாரம்
- பணம் சார்ந்த பொருளாதாரம்
- தொழில் அமைப்பு நிர்வாகம்
- பொது நிதியியல்
- தொழில் நுட்ப கொள்கையில் ஆராய்ச்சி மற்றும் மேம்பாடு
- இடம் மற்றும் சமூகம் சார்ந்த கொள்கைகள்
- தொழிலாளர் சார்ந்த பொருளாதாரம்
- மக்கள்தொகை பொருளாதாரம்

குறிப்பு

- மேம்பாட்டு பொருளாதாரம்
- நிர்வாக பொருளாதாரம்
- நிதிசார் உளவியல்
- பொருளாதார நிலவியல்
- மனை வியாபாரம் தொடர்பான பொருளாதாரம்
- ஆற்றல் பொருளாதாரம்
- பசுமை பொருளாதாரம்
- சமூக பொருளாதாரம்
- நடத்தை பொருளாதாரம

**பொருளாதார பாடத்தில் ஆராய்ச்சி முன்னோடிகள்**

வியாபாரம் மற்றும் நிர்வாக பாடங்களில் செய்யப்படும் ஆராய்ச்சிகளை கீழே தரப்பட்டுள்ளன.

- கணக்குப்பதிவியல்
- நிதி
- வியாபார தந்திர நிர்வாகம் (Strategic management)
- கல்வி நிர்வாகம்
- செயல்பாடுகள் நிர்வாகம் (Operational management)
- உற்பத்தி நிர்வாகம்
- மனித வள நிர்வாகம்
- சந்தையியல்
- அமைப்பு பகுப்பாய்வு மற்றும் திட்டமிடல்
- கொள்கை வகுத்தல் மற்றும் முடிவெடுத்தல்
- வியாபாரத்தில் நேர்மைத் தன்மை (Ethics in business)
- ஊக்கப்படுத்துதல்
- உலகமயமாக்கல்
- பயிற்சி மற்றும் மேம்பாடு
- ஆள்சேர்ப்பு மற்றும் பணியமர்த்துதல்
- அமைப்பு உறவுகள் (Industrial relation)
- மெய்நிகர் தொழில்நுடம்பம் (Virtual Technology)
- மாற்ற நிர்வாகம் (Change management)
- தொழில் நுகர்வோரியியல்
- அமைப்பு நடத்தை
- நிலையான வியாபார நடைமுறைகள்
- மொத்த தர நிர்வாகம்
- அளிப்பு சங்கிலி
- திட்ட நிர்வாகம்
- அரசியல் வியாபார தந்திரம்

- கண்டுபிடிப்பு நிர்வாகம் (Innovation management)

## 4.10. சுருக்கம்



- ஒரு சமூக அறிவியல் ஆராய்ச்சியை தொடங்குவதற்கு முன்னர், ஆராய்ச்சியாளர் தமது ஆராய்ச்சியை முறையாக திட்டமிட்டுக்கொள்வது அவசியம். இவ்வாறு செய்வது அவர் தனது ஆராய்ச்சியை எவ்வித தங்குதடையின்றி திறம்பட செய்வதற்கு உதவியாக இருக்கும்.
- ஆராய்ச்சி பிரச்சனைகளை ஆராய்ச்சியாளர் அவர் பாடம் தொடர்பான பல்வேறு ஆராய்ச்சி கட்டுரைகளை தொடர்ந்து படிப்து, நாளேடுகளை படிப்பது, ஆராய்ச்சி தொடர்பான கருத்தரங்கள் போன்றவற்றில் பங்கேற்பது போன்றவற்றின் வாயிலாக பிரச்சனைகளை கண்டறிவது இலகுவாக இருக்கும்.
- ஆராய்ச்சி பிரச்சனை என்பது ஒரு ஆராய்ச்சியாளர் தமது அனுபவத்தில் ஏதேனும் கோட்பாட்டிலோ அல்லது நடைமுறையிலோ சந்திக்கும் கடினத்தன்மையும் அதற்கு அவர் தகுந்த தீர்வு தருவதற்கு தின்னமாயிருக்கிறார் எனில் அது ஆராய்ச்சி பிரச்சனை என்று அழைக்கப்படுகிறது.
- ஒரு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்படும் பிரச்சனையானது மிக கவனமாக தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இந்த பணியானது மிக கடினமான ஒன்றாகும். ஆனால் மேலோட்டமாக பார்க்கும்போது இப்பணி அவ்வளவு கடினமானது என்று தோன்றாது. இது தொடர்பாக ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ச்சி வழிகாட்டியின் உதவியை நாடலாம். இருப்பினும், ஒவ்வாவாரு ஆராய்ச்சியாளரும் தானே தனது அனுபவத்தின் வாயிலாக ஆராய்ச்சி பிரச்சனையை தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டுமே தவிர இதை மற்றவர்களிடமிருந்து பெறுதல் கூடாது.
- பொதுவாக அனுபவம் வாய்ந்த ஆராய்ச்சியாளர்கள் கூறுவது, ஒரு ஆராய்ச்சி பிரச்சனையை தெளிவாக வரையறுத்துவிட்டாலே ஆராய்ச்சியில் பாதி பிரச்சனை முடிவுக்கு வருகிறது.
- ஆராய்ச்சியாளர் தான் கண்டறிந்த ஆராய்ச்சி பிரச்சனையை குறிப்பிட்ட எல்லைக்குள் வரையறுக்க வேண்டும். இவ்வாறு செய்யும்போது ஆராய்ச்சியாளர் அதற்குள் ஆராய்ச்சி நோக்கங்களை வரையறுத்து ஆராய்ச்சியை மேற்கொள்ள முடிகிறது.
- மனித இனமானது தகவல்களின் முக்கியத்துவத்தினை அதிகமாக உணர்ந்துள்து. மனித இனத்தின் ஆரம்பகால நாகரிக வளர்ச்சியில் தகவல்கள் மற்றும் தகவல் பரிமாற்றங்களின் முக்கியத்துவத்தை உணர்ந்து அவற்றை மேம்படுத்தியும் வந்துள்ளது.

குறிப்பு

- ஒரு ஆராய்ச்சியின் முக்கியமான நோக்கமானது ஒரு பிரச்சனைக்கு முறையாக தீர்வினை வழங்குவதாகும்.
- ஒரு தகவலின் அடக்க விலையானது அத்தகவலை பெறுவதற்கு செய்யப்பட்ட செலவுகளை குறிக்கும்.
- ஒரு குறிப்பிட்ட பாடத்தில் இதற்கு முன்னர் உள்ள ஆராய்ச்சியாளர்கள் செய்த ஆராய்ச்சிகள் தொடர்பானவற்றை மதிப்பிட்டு, பாகுபடுத்தி அவற்றை விளக்கிக்கூறுவதே ஆராய்ச்சி முன்னோடியாகும்.

## 4.11 புரிதலை சோதிக்கும் வினாக்கள்

1. ஒரு ஆராய்ச்சி பிரச்சனை என்றால் என்ன?
2. ஆராய்ச்சி முன்னோடி என்றால் என்ன?
3. ஒரு தகவலின் மதிப்பு எவ்வாறு கணக்கிடப்படுகிறது?
4. பொருளாதார துறையில் செய்யப்படும் ஏதேனும் மூன்று ஆராய்ச்சி பாடங்களை குறிப்பிடுக.

## 4.12. பயிற்சி வினாக்கள்

1. ஒரு ஆராய்ச்சியினை மேற்கொள்ளும் முன்னர் அவ்வாராய்ச்சிக்கான ஆராய்ச்சி இடைவெளியை எவ்வாறு கண்டறிவாய் என்பதை விளக்குக.
2. ஒரு ஆராய்ச்சி பிரச்சனையின் கூறுகளை விளக்குக.
3. எவ்வாறு ஒரு ஆராய்ச்சி பிரச்சனையை தேர்வு செய்வாய் என்பதை விவாதம் செய்க.
4. ஒரு ஆராய்ச்சி பிரச்சனையை வரையறுப்பதின் நுட்பங்களை விளக்குக.
5. ஒரு வணிக ஆராய்ச்சி முன்னோடிகள் குறித்து ஒரு குறிப்பு எழுதுக.

## 4.12. மேலும் பயில புத்தகங்கள்

Kothari C.R., Research Methodology – Methods and Techniques, New Age International (P) Limited Publishers, New Delhi, 2004.

Priti R Majhi and Prafull K Khatua Research Methdology (Concepts, Methods, Techniques and SPSS), Himalaya Publishing House, Mumbai, 2015.

# அலகு – 5:

## பொருளாதார நிர்வாகம்

குறிப்பு

5.1. ஆராய்ச்சி இடைவெளி (Research Gap)

5.2. ஆராய்ச்சி இடைவெளியை அறிவதன் தேவை ஆராய்ச்சி திட்டங்கள்

5.3 கருதுகோள் (Hypothesis)

5.4 ஆராய்ச்சி வடிவமைப்பு

5.5 புரிதலை சோதிக்கும் வினாக்கள்

5.6 பயிற்சி வினாக்கள்

5.7. சுருக்கம்

இந்த அலகில் நாம் ஒரு ஆராய்ச்சி இடைவெளியை கண்டறிதல், இதை கண்டறிவதன் பயன்கள், ஆராய்ச்சி இடைவெளியை கண்டறிவதின் நுட்பங்கள் ஆகியவற்றை பற்றியும், கருதுகோள் (Hypothesis) என்பதன் பொருள், கருதுகோளின் பல்வேறு வகைகள் மற்றும் மூலங்கள் பற்றியும் காணலாம். மேலும் கருதுகோள்களை உருவாக்குதல் மற்றும் அவற்றை சோதனை செய்தல் ஆகியவற்றை பற்றியும் காணலாம். இந்த அலகில் ஆமுராய்ச்சி வழவமைப்பு பற்றியும் ஆராய்ச்சி வடிவமைப்பை பாதிக்கும் காரணிகள் மற்றும் ஆராய்ச்சி வடிவமைப்பை மதிப்பிடுவது பற்றியும் நாம் விவாதிக்கலாம்.

## 5.1. ஆராய்ச்சி இடைவெளி (Research Gap)

ஒரு ஆராய்ச்சியை மேற்கொள்ளும்போது ஆராய்ச்சியாளர் ஆராய்ச்சி இடைவெளியை கண்டறிவது அவசியமாகும். ஆராய்ச்சி இடைவெளி என்பது எந்த ஒரு ஆராய்ச்சி கேள்விக்கு அல்லது ஆராய்ச்சி பிரச்சனைக்கு இதுவரை மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளால் பதிலளிக்கப்பட்டிருக்கவில்லையோ அதுவேயாகும். அதாவது ஒரு பாடத்தில் அல்லது அதன் பிரிவில் மேற்கொள்ளப்பட்ட முந்தய ஆராய்ச்சிகளினால் விடை அளிக்கப்படாத ஆராய்ச்சி கேள்விகள் அல்லது ஆராய்ச்சி பிரச்சனைகளை ஆராய்ச்சி இடைவெளி எனலாம். ஆராய்ச்சி இடைவெளியை ஆராய்ச்சி கேள்விகளுடன் குழப்பிக்கொள்ளக்கூடாது. இரண்டும் வெவ்வேறாகும்.

## 5.2. ஆராய்ச்சி இடைவெளியை அறிவதன் தேவை மற்றும் ஆராய்ச்சி திட்டங்கள்



ஒரு ஆராய்ச்சியாளர் ஒரு அசல் ஆராய்ச்சியை மேற்கொள்ளும்போது அவர் தனது ஆராய்ச்சியின் தொடக்கத்தை கண்டறிய முற்படுகிறார். ஏனெனில் அவரது ஆராய்ச்சி அறிக்கையை படிப்பவர்களுக்கு அவரது ஆராய்ச்சியானது ஏற்கனவே மேற்கொள்ளப்பட்டது அல்ல என்பதை உணர்த்துவதற்காக இவ்வாறான முயற்ச்சயை மேற்கொள்கிறார். இந்த செயல்முறையில் அவர் அத்துறையில் மேற்கொள்ளப்பட்ட முந்தய ஆராய்ச்சிகளை கணக்கெடுப்பு செய்து அவற்றின் முடிவுகளை அறிகாறார், இதன் வாயிலாக அவ்வாராய்ச்சியாளர் முந்தய ஆராய்ச்சிகளில் செய்யாமல விட்ட ஆராய்ச்சி இடைவெளியை கண்டறிந்து, அதில் தனது ஆராய்ச்சியை தொடங்குகிறார். ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சி பிரச்சனைக்ள கண்டறிந்து அவற்றின் முக்கயத்துவத்தை குறிப்பிடுகிறார் மேலும் அவர் ஏற்கனவே எழுதப்பட்டுள்ளதில் எது முக்கியத்துவம் வாய்ந்தது என்பதையும் தெரிவிக்கிறார். ஏற்கனவே மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளை விளக்குவதன் வாயிலாக அவர் தனது ஆராய்ச்சிக்கான ஆராய்ச்சி இடைவெளியை விளக்குகிறார். இச்செயல்பாடானது அவரது யஆராய்ச்சி துறையில் ஒரு பங்களிப்பினை ஏற்படுத்த ஒரு வாய்ப்பளிக்கிறது.

எனவே, ஆராய்ச்சியாளர் மேற்கொள்ளவிருக்கும் ஒரு ஆராய்சசியில் ஆராய்ச்சி இடைவெளியினை கண்டறிந்து நிறுவுவதற்கு துணைபுரிகிறது. இதன் வாயிலாக ஆராய்ச்சியாளரின் ஆராய்ச்சி அறிக்கையில் ஆராய்ச்சி திட்டம் மற்றும் ஆராய்ச்சி முன்னோடிகள் படங்களானது, அவ்வாராய்ச்சி அறிக்கையை படிப்பவர்களுக்கு மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சியில் ஆராய்ச்சி இடைவெளி உள்ளது என்பதை உணர்த்தும் விதமாக அமைகிறது மற்றும் இவ்வாராய்ச்சி முக்கியத்துவம் வாய்ந்தது என்பதையும் உணர்த்துகிறது. ஒரு ஆராய்ச்சியாளரின் முதன்மையான நோக்கமானது, ஆராய்ச்சி இடைவெளியை கண்டறிந்து அதில் ஆராயச்சியை மேற்கொள்வதாகும்.

ஆராய்ச்சி இடைவெளியின் சிறப்பியல்புகளை பின்வருமாறு காணலாம்,

- இது ஆராய்ச்சியாளரின் ஆராய்ச்சி அறிக்கையை பதிப்பிட உதவுகிறது.
- இது முன்னர் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளில் விடுபட்டுள்ள கூறுகளை கண்டறிய உதவுகிறது.
- ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சி வாயிலாக இந்த ஆராய்ச்சி இடைவெளியை நிரப்புவதற்கு உதவுகிறது.

## 5.3 கருதுகோள் (Hypothesis)

குறிப்பு

கருதுகோள் (Hypothesis) என்கிற வார்த்தையானது கிரேக்க வார்த்தையான 'hypotithenai' என்கிற வார்த்தையிலிருந்து பெறப்பட்டதாகும். இதற்கு அவ்வாறாக இருக்கலாம் (கருதுகிறேன்) என்பது பொருளாகும். கருதுகோளுக்கு பல்வேறு சிறப்பியல்புகள் உள்ளன. ஆவை கீழே தரப்பட்டுள்ளன.

- **தெளிவு மற்றும் துல்லியம்**
  ஒரு கருதுகோளானது ஒரு ஆராய்ச்சியில் சீரான முடிவுகளை எழுதுவதற்கு ஏதுவாக தெளிவானதாகவும் துல்லியமானதாகவும் இருத்தல் வேண்டும்.
- **இரண்டு மாறிலிகளுக்கிடையேயான உறவினை வெளிப்படுத்தும் அறிக்கை**
  ஒரு கருதுகோளானது தொடர்புகளை வெளிப்படுத்துவதாயின், அது இரண்டு வெவ்வேறு மாறிலிகளுக்கிடையேயான உறவினை கூற வெண்டும்.

- **சோதிக்கும்வகையிலிருத்தல்**
  ஒரு கருதுகோளானது சோதனை செய்யும் விதமாக அமைதல் வேண்டும். அவ்வாறு இருப்பின் சோதனைக்கு பிறகு அக்கருதுகோள் ஏற்கப்பட்டதா அல்லது நிராகரிக்கப்பட்டதா என கூறவும் மற்றும் அதற்கான காரணங்களை குறிப்பிடவும் முடியும். கருதுகோளினை சோதனைக்குறியதாக உருவாக்க ஆராய்ச்சியாளர் சில முன் ஆராய்ச்சி (prior study) மேற்கொள்ளவேண்டும்.
- **வரையறுக்கப்பட்ட எல்லையுடன் குறிப்பிட்டதாக இருத்தல்**
  ஒரு கருதுகோளானது வரையறுக்கப்பட்ட பரவெல்லையுடன் குறிப்பிட்டதாக இருக்கும்போது வரையறுக்கப்படாத எல்லையுடன் கூடிய கருதுகோளை சோதனை செய்வதை விட எளிதாக இருக்கும். எனவே ஆராய்ச்சியாளர் இவ்வகையான கருதுகோளினை உருவாக்கிட அதிக நேரத்தினை செலவிடுவதில் தவறில்லை.
- **எளிமையானதாக இருத்தல்**
  ஒரு கருதுகோளானது படிப்பவர்கள் புரிந்துகொள்ளும் விதமாக தெளிவான வார்த்தைகளுடன் எளிமையானதாக உருவாக்கப்படுதல் வேண்டும்.
- **நிலைத்தன்மை**
  ஒரு கருதுகோளானது நம்பகத்தன்மையுடனும் ஏற்கனவே உருவாக்கப்பட்ட உண்மைகளுடன் நிலைத்தன்மையுடையதாகவும் இருத்தல் வேண்டும்.

குறிப்பு

- **கால வரையறை (Time LImit)**
  உருவாக்கப்பட்ட கருதுகோளானது ஒரு குறிப்பிட்ட நியாயமான காலக்கட்டத்திற்குள் சோதனை செய்யும்விதமாக இருத்தல் வேண்டும். அவ்வாறு செய்யும்வகையில், ஆராய்ச்சியாளர் அக்காலக்கட்டத்தில் கருதுகோளினை சோதனை செய்வதற்கு தேவையான தகவல்களை திரட்டி சோதனையிட்டு அக்காலக்கட்டத்தில் முடிக்க வேண்டும்.
- **அனுபவ மேற்கோள் (Empirical Reference)**
  ஒரு கருதுகோளானது ஒரு பிரச்சனை தொடர்பான போதுமான உண்மைகளை விவரித்தல் வேண்டும் அல்லது அவ்ஊண்மைகளால் அக்கதுகோளானது ஆதரவு பெற்றிருக்க வேண்டும்.

**கருதுகோள் சோதனை: அளவுரு மற்றும் அளவுரு அல்லாத சோதனைகள் (Hypothesis Testing: Parametric and Non-parametric Tests)**

கருதுகோள் சோதனை என்பது, ஆராய்ச்சியாளர் வடிவமைத்த கருதுகோள் ஏற்றுக்கொள்ளக்கூடியதா அல்லது இல்லையா என்பதை தகுந்த கருவிகள் வாயிலாக சோதனையிடுதலாகும். இச்சோதனையில் அக்கருதுகோளானது ஏற்றுக்கொள்ளப்பட்டதா அல்லது நிராகரிக்கப்பட்டதா என்பதே முடிவாகும். கருதுகோளினை வடிவமைத்து சோதனையிடுவதில் ஆராய்ச்சியாளர் பல்வேறு செயல்முறைகளை மேற்கொள்ள வேண்டும்.

**கருதுகோள்: புஜ்ஜிய மற்றும் மாற்று கருதுகோள்கள் (Hypothesis: Null and Alternative)**

ஒரு கருதுகோள் என்பது ஒரு தர்க்க அல்லது அனுபவ விளைவுகளை சோதனை செய்வதற்காக வடிவமைக்கப்படும் ஒரு தோராய அனுமானமாகும். கருதுகோளானது ஒரு தற்காலிக யோசனையாகும் மேலும் இது சோதனைக்கு உட்பட்டதாகும், எனினும் இதற்கு குறிப்பிடத்தகுந்த எந்த ஒரு அர்த்தமும் இல்லை. பொதுவாக இது சிக்கலான கணிதவியல் கணக்கீட்டு முறைகளை எளிமைப்படுத்தும் முறையாக அறியப்படுகிறது. ஒது புள்ளியியல் அனுமானம் செய்வதன் கலையில் கருதுகோள் வடிவமைப்பு மற்றும் சோதனையிடல் முக்கியமான பங்கினை பெறுகிறது.

கருதுகோள் என்பது பொதுவாக மாறுபாடு மற்றும் எதிர்பார்க்கும் மதிப்புகளை பற்றிய மக்கள்தொகை (population) அளவுரு குறித்த அறிக்கையாகும். கருதுகோளினை சோதனையிடும்போது, சராசரி மற்றும் விகிதாச்சாரம் போன்றவை கருத்தில் கொள்ளப்படுகின்றன. ஒரு பயனுள்ள கருதுகோளானது எதிர்காலத்தை கணிப்பதற்கான காரணங்களையும் அது தள்ளுபடி செய்யப்பட்டால் அதற்கான காரணங்களையும் கூறுகிறது. எனவே, கருதுகோளானது பல மாறிலிகளுக்கிடையேயான நடைமுறை தொடர்பினை விளக்குகிறது.

குறிப்பு

முடிவுகளை எடுக்கும்போது, வடிவமைக்கப்பட்ட கருதுகோளானது ஏற்கப்பட்டதா அல்லது நிராகரிக்கப்பட்டதா என கூறவேண்டும். இது திரட்டப்பட்ட தகவல்களின் அடிப்படையில் செய்யப்படுகிறது. சந்தையியல், தொழில் மற்றும் நிர்வாகம் போனற துறைகளில் முடிவெடுத்தல் என்பது முக்கிய பங்கு வகிக்கிறது. புள்ளியியல் ரீதியான கருதுகோளினை சோதனை ஶரீயிடும்போது மாதிரியானது (sampling) அக்குருதுகோளினை ஏற்றுக்கொள்வதா அலர்லது நிராகரிப்பதா என்பதை தீர்மாணம் செய்ய உதவுகிறது.

கருதுகோளினை உருவாக்கும்போது அதன் வகைகளை கருத்தில் கொள்ளவேண்டும் கருதுகோளானது பூஜ்ஜிய கருதுகோள் மற்றும் மாற்றுக் கருதுகோள் என இரண்டுவகைப்படுகிறது.

### பூஜ்ஜிய கருதுகோள் (Null Hypothesis)

மேற்கண்ட இரண்டு வகையான கருதுகோள்களும் முக்கயமானதாகும், இவை ஆராய்ச்சியின் தேவைக்கேற்ப பயன்படுத்தப்படுகிறது. இதில் பூஜ்ஜிய கருதுகோளானது புள்ளியியல் கருதுகோள் என்று அழைக்கப்படுகிறது மேலும் இது Ho என்கிற குறியீட்டால் குறிக்கப்படுகிறது.

### மாற்றுக் கருதுகோள் (Alternative Hypothsis)

பூஜ்ஜிய கருதுகோளுக்கு மாற்றாக கருதப்படுவது மாற்றுக் கருதுகோளாகும். இது H1 என்கிற குறியீட்டால் குறிக்கப்படுகிறது.

குறிப்பு 1: போதுவாக ஒரு கருதுகோளுக்'கு எதிராக சோதனைகள் வாயிலாக ஆதாரங்கள் கிடைக்குமாயின் அது பூஜ்ஜிய கருதுகோள் என அழைக்கப்படுகிறது. அச்சோதனை அக்கருதுகோள் சரி என கூற முடியாது மேலும் அக்கருதுகோளுக்கு எதிராக சில ஆராரங்களை தர முடியும்.

இச்சோதனையானது அக்கருதுகோளினை ஏற்றுக்கொள்வதா அல்லது நிராகரிப்பதா என்பதன் செயல்பாடாகும்.

குறிப்பு 2: மாதிரியிலிருந்து எவ்வித ஆதாரங்களும் கிடைக்காதபோது இக்கருதுகோளினை ஏற்றுக்கொள்ளப்படும். இதை ஏற்றுக்கொண்டாக வேண்டும்.

ஒரு கருதுகோளினை நிராகரிப்பது என்பது அக்கருதுகோளானது தவறு என்பதை கூறுகிறது. நிலையில்லாத்தன்மையுடன் உள்ள பிரச்சனைகளை இவ்வாறு கருதுகோளினை உருவாக்கி முடிக்கலாம்.

ஒரு பூஜ்ஜிய கருதுகோள் (Ho) நிராகரிக்கப்படுகிறது எனில் அதன் மாற்றுக்கருதுகோள் (H1) ஏற்றுக்கொள்ளப்படுகிறது என பொருள்.

உதாரணமாக கீழ்கண்டவாறு ஒரு பூஜ்ஜிய கருதுகோள் உருவாக்கப்படலாம்.

குறிப்பு

Ho: சந்தையில் ஒரு புதிய குளியல் சோப்பு முன்னர் சந்தையில் உள்ள சோப்புகளை காட்டிலும் தரமில்லாதது என உருவாக்கலாம். ஆதன் முடிவானது இக்கருதுகோள் நிராகரிக்கப்பட்டால் அவ்வாறு இல்லை என்பது முடிவாக இருக்கும்.

மேற்கண்ட கருதுகோளின் மாற்றுக் கருதுகோளானது (H1) சந்தையின் புதிய குளியல் சோப்பு முன்னர் உள்ள சோப்புகளை போல தரமுள்ளது என கொள்ளலாம்.

**பூஜ்ஜிய மற்றும் மாற்றுக் கருதுகோள்களுக்கிடையேயான வேறுபாடுகள்**

- பூஜ்ஜிய கருதுகோளானது எப்போதும் குறிப்பிடத்தக்கதாக இருக்கும். மாற்றுக்கருதுகோளானது தோராய மதிப்பை தருவதாக இருக்கும்.
- பூஜ்ஜிய கருதுகோளை நிராகரிப்பதில் அதிகபடியான இடர்பாடுகள் (Risk) உள்ளன. ஆனால் மாற்றுக்கருதுகோளில் அவ்வாறு இல்லை.
- பூஜ்ஜிய கருதுகோளின் மாற்றுக்கருதுகோளை விட புள்ளியியல் கருவிகள் அதிகம் பயன்படுத்தப்படுகின்றன, ஏனெனில் இது குறிப்பிடத்தகுந்ததாகும் மற்றும் இது நிகழ்வுகளின் அடிப்படையில் இல்லாததாகும்.

**கருதுகோளினை சோதனையிடுவதின் செயல்பாடுகள்**

1. **முறையான அறிக்கையை வடிவமைத்தல்**

   இந்த செயல்பாட்டில் பூஜ்ஜிய அல்லது மாற்றுக் கருதுகோள் எதுவாயினும் அதன் தன்மையானது தெளிவாக கூறப்பட வேண்டும். கருதுகோள் சோதனையில் ஆராய்ச்சி பிரச்சனையை கூறுவது என்பது மிக முக்கியமாகும். இதற்கு ஆராய்ச்சியாளர் முறையான கவனம் செலுத்த வேண்டும். இதை மேற்கொள்ளும்போது, ஆராய்ச்சி நோக்கங்கள் மற்றும் பிரச்சனையின் தன்மை ஆகியவை கருத்தில் கொள்ளப்பட வேண்டும்.
2. **முக்கியத்துவ அளவை தேர்ந்தெடுத்தல் (Significant Level)**

   இந்த நிலைபடியில், ஆராய்ச்சியாளர் ஒரு குறிப்பிட்ட முக்கியத்துவ அளவில் கருதுகோளினை சோதனை செய்கிறார். இது ஆராய்ச்சி பிரச்சனையின் தன்மை மற்றும் அதன் நோக்கத்தின் அடிப்படையில் போதுமானதாக இருத்தல் வேண்டும்.
3. **மாதிரி பங்கீடு**

இப்படிநிலையில், ஆராய்சியாளர் தேவையான போதுமான மேலும் முற்றிலும் பொருந்தக்கூடிய அளவில் மாதிரிகளை முடிவு செய்து தேர்வு செய்யவேண்டும்.

4. **மாதிரியின் சீரற்ற தேர்வு**

இப்படிநிலையில் மாதிரி தகவல்களிலிருந்து சீரற்ற மாதிரிகள் தேர்வு செய்யப்படுகின்றன இது பொருத்தமான மதிப்பை கண்டறிய செய்யப்படுகிறது.

5. **நிகழ்தகவு கணக்கீடு**

இந்த படிநிலையில், பூஜ்ஜிய கருதுகோளினை அடிப்படையாக கொண்டு மாதிரி முடிவின் உண்மைத்தன்மையை அறிவதற்கு நிகழ்தகவு கணக்கிடப்படுகின்றது.

6. **ஒப்பீடு**

இந்த படிநிலையில், கணக்கிடப்பட்ட புள்ளியியல் விவரங்கள் ஒப்பீடு செய்யப்பட்டு கருதுகோளின் முடிவுகள் அறியப்படுகின்றன.

குறிப்பு

## 5.4 ஆராய்ச்சி வடிவமைப்பு (Research Design)

ஆராய்ச்சி வடிவமைப்பு என்பது ஒட்டுமொத்த ஆராய்ச்சி வேலையை பற்றிய ஒரு புாதலை தரும் கட்டமைப்பாகும். இது சரியான திட்டமிடல் மற்றும் நல்ல உபாயத்தை (strategy) நடைமுறைப்படுத்துதலின் வெளிப்பாடாகும். புல்வேறு நூலாசிரியர்கள் ஆராய்ச்சி வடிவமைப்பிற்கு பல்வேறு இலக்கணங்களை வகுத்துள்ளனர். கெர்லிங்கர் என்பவரின் கூற்றுப்படி ஆராய்ச்சி வடிவமைப்பு என்பது ஒரு திட்டம், கட்டமைப்பு ஆராய்ச்சி கேள்விகளுக்கு விடையை பெறுவதற்கான செயல்பாட்டில் விசாரனை நடத்துவதின் உபாயம் மற்றும் மாறிலிகளை கட்டுப்படுத்துதல். பேர்னால்ட் பிலிப்ஸ் என்பவர் ஆராய்ச்சி வடிவமைப்பை இவ்வாறு வரையறுக்கிறார், “இது தகவல் திரட்டுதல், அவற்றை அளவிடுதல் மற்றும் அவற்றை பகுப்பாய்வு செய்வதன் வரைபடமாகும்”.

கிரீன் மற்றும் பல நூலாசிரியர்கள் (2008) ஆராய்ச்சி வடிவமைப்பினை இவ்வாறு வரையறுக்கின்றனர், “இது ஆராய்ச்சி முறையை குறிப்பிட்டு சொல்வதும் தேவையான தகவல்களை பெறுவதற்கான நடைமுறையுமாகும். மேலும் இது ஒரு ஆராய்ச்சியில் எவ்வாறான தகவல்களை திரட்டுவது, அதற்கான மூலங்கள் எவை மற்றும் அவற்றை திரட்டுவதற்கான நடைமுறைகள் போன்றவற்றை குறிப்பிடுவதன் ஒரு கட்டமைப்பாகும். இது ஒரு நல்ல ஆராய்ச்சி வடிவமைப்பாக இருக்குமாயின், இது திரட்டப்பட்ட தகவல்கள் ஆராய்ச்சி கேள்விகள் தொடர்புடையவை மற்றும் இவை ஆராய்ச்சி நோக்கங்கள்

மற்றும் பொருளாதார நடைமுறைகளினால் பெறப்பட்டவை என்பதை சான்றளிக்கிறது".



ஒரு ஆராய்ச்சி வடிவமைப்பினை வடிவமைக்கும் முடிவினை செய்யும்போது அது கீழ்காணும் கேள்விகள் அடிப்படையில் இருத்தல் வேண்டும்.

- இந்த ஆராய்ச்சி எதை பற்றியது?
- இந்த ஆராய்ச்சி ஏன் மேற்கொள்ளப்படுகிறது?
- இந்த ஆராய்ச்சிக்கு எந்த மாதிரியான தகவல்கள் தேவைப்படுகின்றன?
- இவ்வாறு தேவைப்படும் தகவல்களை எங்கிருந்து பெறலாம்?
- இந்த ஆராய்ச்சியை மேற்கொள்ள எவ்வளவு காலம் ஆகும்?
- இவ்வாராய்ச்சி வடிவமைப்பின் மாதிரி என்ன?
- திரட்டப்பட்ட தகவல்களை எவ்வாறு பகுபாபாய்வு செய்ய வேண்டும்?
- ஆராய்ச்சி அறிக்கை தயாரிப்பு எவ்வகையில் செய்யப்பட இருக்கிறது?

ஒரு நல்ல ஆராய்ச்சி வடிவமைப்பானது ஆராய்ச்சியாளர் தனது ஒழுங்கமைக்கவும் அதன் குறைபாடுகளை சோதனையிடவும் தகவல் திரட்டலில் போதாமையையும் அறிந்துகொள்ள உதவுகிறது. இது கீழ்வரும் கூறுகளை உள்ளடக்குகிறது.

- ஆராய்ச்சியாளர் தான் மேற்கொள்ள இருக்கும் ஆராய்ச்சி பிரச்சனையை தெளிவான அறிக்கையாக தயாரித்தல்.
- ஆராய்ச்சிக்கான தகவல்களை பெறும் முறைகள் மற்றும் செயல்முறைகள்.
- ஆராய்ச்சிக்கு திரட்டப்பட்ட தகவல்களை பகுப்பாய்வு செய்திட மேற்கொள்ளும் முறைகள் மற்றும் நுட்பங்கள்.

ஓட்டுமொத்த ஆராய்ச்சி வடிவமைப்பானது கீழ்காணும் நான்கு வகைகளாக பிரிக்கப்படுகிறது.

- **மாதிரி பிரிவு (Sampling part)**

  மேற்கொள்ள உள்ள ஆராய்ச்சிக்கான மாதிரியை தேர்ந்தெடுக்கும் முறையை உள்ளடக்கியுள்ளது.
- **உள்வாங்கும் பிரிவு (Observational part)**

  ஆராய்ச்சியாளர் மேற்கொள்ளும் தகவல் உள்வாங்களில் எவ்வகையான நிபந்தனைகளுக்கு உட்பட்டு செய்ய வேண்டும் என்பதை உள்ளடக்கியுள்ளது.
- **புள்ளியியல் பிரிவு (Statistical part)**

உள்வாங்கள் மற்றும் பல முறைகளின் கீழ் பெறப்பட்ட தகவல்களை எவ்வகையான புள்ளியியல் கருவிகளை கொண்டு பகுப்பாய்வு செய்ய வேண்டும் என்பதை உள்ளடக்கியுள்ளது.

- **செயல்முறை பிரிவு (Operational part)**

  இதில் மாதிரியை தேர்ந்தெடுத்தல், புள்ளியியல் மற்றும் தகவல் திரட்டல் ஆகியவற்றை செய்ய தேர்ந்தெடுக்கப்பட்ட நுட்பங்களை நடைமுறைப்படுத்துவது போன்றவை உள்ளடக்கப்பட்டுள்ளது.



**ஆராய்ச்சி வடிவமைப்பின் தேவை**

ஒரு ஆராய்ச்சியை துவங்கும் முன்னர், ஆராய்ச்சியாளர் தகுந்த மற்றும் திறமையான ஆராய்ச்சி வடிவமைப்பை வடிவமைத்தல் வேண்டும். கீழ்காணும் நன்மைகளை தருவதால் ஆராய்ச்சி வடிவமைப்பு என்பது அவசியமாகிறது.

- இது பல்வேறு ஆராய்ச்சி செயல்முறைகளை மென்மையாக கொண்டுசெல்ல உதவுகிறது.
- இதனை மேற்கொள்ள குறைந்த வேலை, குறைந்த செலவு மற்றும் குறைந்த நேரமே தேவைப்படுகிறது.
- இது ஆராய்ச்சிக்கு தேவைப்படும் தகவல்களை திரட்டுவதற்கும் அவற்றை பகுப்பாய்வு செய்வதற்கும் பொருந்தக்கூடிய முறை மற்றும் நுட்பங்களை தேர்ந்தெடுக்க உதவுகிறது.

ஒரு ஆராய்ச்சியாளர் ஒரு ஆராய்ச்சி வடிவமைப்பை உருவாக்குவதற்கு முன் கீழ்காணும் காரணிகளை கருத்தில் கொள்ளவேண்டும்.

- தேவைப்படும் தகவல்களுக்கான மூலங்கள்
- ஆராய்ச்சியாளரின் திறமை மற்றும் அவருக்கு உதவிசெய்யும் நபர்களின் திறன்.
- ஆராய்ச்சி பிரச்சனையின் குறிக்கோள்கள்
- ஆராய்ச்சி பிரச்சனையின் தன்மைகள்
- இவ்வாராய்ச்சியை மேற்கொள்ள கிடைக்கும் கால அளவு மற்றும் பணம்.

**ஒரு நல்ல ஆராய்ச்சி வடிவமைப்பின் தன்மைகள்**

ஒரு நல்ல ஆராய்ச்சி வடிவமைப்பானது நெகிழ்வுத்தன்மை, திறன் மற்றும் குறைந்த செலவுடையதாக இருத்தல் வேண்டும். ஆனாலும் இதற்கு வேறு வல தன்மைகளும் உள்ளன. ஆத்தன்மைகளாவன,

- மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சியின் பிரச்சனைகளுக்கு தீர்வு பெறும் விதமாக தயாரிக்கப்படும் தகவல்களின் வகைகள் மற்றும் அவற்றின் மூலங்களை தெரிவிக்க வேண்டும்.
- இது தகவல்களை பெறுதல் மற்றும் அவற்றை பகுப்பாய்வு செய்வதன் முறைகளை பின்பற்றுவதற்கான நுட்பங்களை வெளிப்படுத்தும் ஒரு உபாயமாகும்.
- கொடுக்கப்பட்டுள்ள கால அளவிற்குள்ளும் திட்டமிடப்பட்டபடியும் ஆராய்ச்சியை மேற்கொள்ள தேவையான கூறுகளை கொண்டுள்ளது.
- திரட்டப்பட்ட தகவல்களை முறையாக பகுப்பாய்வு செய்து முன்நிபந்தனைகளை குறைக்கவும் நம்பகத்தன்மையை அதிகரிக்கவும் செய்கிறது.
- ஒரு விசாரனையில் (investigation) சோதனை பிழைகளை குறைக்கிறது.
- ஒரு பிரச்சனையை அனுகுவதில் பல்வேறு கோணங்களை அளிக்கிறது.

ஒரு ஆராய்ச்சியாளர் மேற்கொள்ளும் ஆராய்ச்சியின் முறையை பொருத்து ஆராய்ச்சி வடிவமைப்பானது முக்கியத்துவம் பெறுகிறது. ஆராய்ச்சியானது ஆய்வு ஆராய்ச்சியாக இருக்குமாயின், அதில் பெரும்பாலும் புதிய யோசனைகளை வலியுறுத்துவதாக உள்ளது. எனவே, இதை செயல்முறைப்படுத்துவதற்கு ஏதுவாக ஆராய்ச்சி வடிவமைப்பானது நெகிழ்வுத்தன்மையுள்ளதாக இருத்தல் வேண்டும். எவ்வாறு இருப்பின், இது ஆராய்ச்சியை பற்றி துல்லியமாக விளக்குவதாகவும், திரட்டப்படும் தகவல்களின் உண்மைத்தன்மையை அதிகப்படுத்துவதாகவும் இருத்தல் ஒரு நல்ல ஆராய்ச்சி வடிவமைப்புக்கு அவசியம். ஒரு சோதனை வடிவமைப்பை மக்கள்தொகை கணக்கெடுப்பு வடிவமைப்பு அல்லது மாதிரி வடிவமைப்பை உருவாக்கும்போது, ஆராய்ச்சியாளர்களுக்கு கிடைக்கும் நேரம், பணம் மற்றும் அவர்களின் திறன் மற்றும் தகவல் திரட்டலின் முறை ஆகியவற்றை கருத்தில்கொள்ள வேண்டும்.

**ஆராய்ச்சி வடிவமைப்பின் படிநிலைகள்**

ஒரு ஆராய்ச்சி வடிவமைப்பின் படிநிலையானது நீங்கள் மேற்கொள்ளவிருக்கும் ஆராய்ச்சியின் முறையை பொருத்தே அமைகிறது. பொதுவாக ஒரு ஆராய்ச்சி வடிவமைப்பின் படிநிலைகளாவன பின்வருமாறு,

- ஆராய்ச்சி பிரச்சனைகள் அல்லது கேள்விகளை தயார்செய்தல்.
- கிடைக்ககூடிய முந்தய ஆராய்ச்சிகளை மதிப்பிடல்.
- கருதுகோள்களை உருவாக்குதல்.
- ஆராய்ச்சி வடிவமைப்பை கட்டமைத்தல்.

- தகவல்களை திரட்டுதல்.
- தகவல்களை பகுப்பாய்வு செய்தல்.
- ஆராய்ச்சி முடிவுகளை விளக்கி கூறுதல்.
- ஆராய்ச்சி அறிக்கையை எழுதுதல்.

குறிப்பு

நான்காவது படிநிலையில் உள்ள ஆராய்ச்சி வடிவமைப்பை கட்டமைத்தலில், மூன்று துணை படிநிலைகள் உள்ளன. ஆவை கீழே விரிவாக விவாதிக்கப்பட்டுள்ளன.

- **மாறிலிகளை அடையாளம் காணுதல்**
  இப்படிநிலையில், மேற்கொள்ளவிருக்கும் ஆராய்ச்சிக்கான மாறிலிகளை கண்டறிதல் மற்றும் வகைப்படுத்துதல் அடங்கும். இதில் மிக பிரபலமானவை, சார்ந்துள்ள மாறிலிகள், சார்பற்ற மாறிலிகள், கட்டுப்படுத்தப்பட்ட மாறிலிகள் போன்றவையாகும். சார்ந்த மாறிலிகள் என்பவை பாடத்திற்கு தொடர்புடைய மற்றும் தகவல் திரட்டுதலின் வெளிப்படையாக உள்ளவை. இவை வேறொரு மாறிலியை சார்ந்தோ அல்லது அவற்றால் கட்டுப்படுத்தப்பட்டோ இருக்கும். சார்பற்ற மாறிலிகள் என்பவை இதற்கு மாறாக, ஆய்வு செய்பவை அல்லது கணிக்கக்கூடிய மாறிலிகளாக உள்ளன.
- **செயல்பாட்டு வரைவிலக்கணங்கள் தருதல்**
  ஆராய்ச்சி மேற்கொள்ளும்போது பல்வேறு மாறிலிகள் எவ்வாறு ஆராய்ச்சியில் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை விளக்கும் விதமாக அவற்றுக்கு செயல்பாட்டு வரைவிலக்கணங்கள் தருதல் வேண்டும்.
- **தகவல் பகுப்பாய்விற்கு வடிவமைப்பை தேர்ந்தெடுத்தல்**
  இது தகவல் திரட்டுதல் செயல்பாட்டில் ஒரு முன்னோடி படிநிலையாகும். திரட்டப்பட்ட தகவல்களை பகுப்பாய்வு செய்திட பொருத்தமான வடிவமைப்பை ஆராய்ச்சியாளர் தேர்ந்தெடுத்து செயல்படுத்தவேண்டும்.

**ஆராய்ச்சி வடிவமைப்பின் வகைகள்**

புல்வேறு ஆராய்ச்சி வடிவமைப்பானது மேற்கொள்ளவிருக்கும் ஆராய்ச்சியை பொருத்து வகைப்படுத்தலாம். ஆராய்ச்சி வடிவமைப்பை பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

- ஆய்வு ஆராய்ச்சி படிப்புகளுக்கான ஆராய்ச்சி வடிவமைப்பு.
- விளக்க ஆராய்ச்சிக்கான ஆராய்ச்சி வடிவமைப்பு.
- அளவு ஆராய்ச்சிக்கான ஆராய்ச்சி வடிவமைப்பு.
- தர ஆராய்ச்சிக்கான ஆராய்ச்சி வடிவமைப்பு.
- சோதனை ஆராய்ச்சிக்கான ஆராய்ச்சி வடிவமைப்பு.

## 1. ஆய்வு ஆராய்ச்சி வடிவமைப்பு



ஆய்வு ஆராய்ச்சி வடிவமைப்பானது சூத்திர ஆராய்ச்சி வடிவமைப்பு எனவும் அழைக்கப்படுகிறது. இதில் ஒரு குறிப்பிட்ட பொருள் ஆராய்ச்சிக்குட்படுத்தப்படுகிறது. இது ஒரு கருதுகாள்களின் தொகுதியேயை உருவாக்க உதவுகிறது அல்லது பின்னர் உபயோகப்படுத்தும் விதமாக ஆராய்ச்சி அடிப்படையிலான கேள்விகளை உருவாக்க உதவுகிறது. ஆய்வு அடிப்படையிலான ஆராய்ச்சிகளுக்கு பொருந்தக்கூடிய மூன்று முறைகள் கீழே விவாதிக்கப்பட்டுள்ளன.

**1. முந்தய ஆராய்ச்சிககளின் கணக்கெடுப்பு**

ஒரு ஆராய்ச்சி பிரச்சனையை கண்டறிந்து விளக்குவதில் எளிமையான முறை முந்தய ஆராய்ச்சிகளை தொகுத்தளித்தலாகும். இதில் முந்தய கருதுகோள்களை விமர்சனம் செய்து அதை எதிர்கால ஆராய்ச்சிக்கு மதிப்பீடு செய்யப்படுகிறது.

**2. அனுபவ கணக்கெடுப்பு**

இது ஒரு ஆராய்ச்சியில் நடைமுறையில் அனுபவ நபர்கள் ஈடுபட்டுள்ளதை குறிப்பிடும் வகையாகும். இவ்வகை கணக்கெடுப்பில், புதுமையான யோசனைகளுடன் உள்ள நபர்களை கவனமாக கண்டறிந்து அவர்களை மாதிரிகளாக தேர்ந்தெடுத்து அவர்களிடம் ஆராய்ச்சியாளர்கள் நேர்காணலை நடத்தி தகவல்களை திரட்டுவர். எனவே அனுபவ கணக்கெடுப்பானது ஆராய்ச்சியாளர் ஆராய்ச்சி பிரச்சனைகளை சுருக்கமாக குறிப்பிட வகை செய்கிறது. மேலும் இது பல்வேறு ஆராய்ச்சிகளில் நடைமுறை சாத்தியமுள்ள தகவல்களை அளிக்க இவ்வகை கணக்கெடுப்பு வகை செய்கிறது.

**3. நுண்ணறிவை தூண்டும் உதாரணங்களை பகுப்பாய்தல்**

இது ஒரு நிகழ்வின் குறிப்பிட்ட காரணிகளை தீவிரமாக படிப்பதை உள்ளடக்கியுள்ளது. இம்முறையில், விசாரனை செய்பவரின் அணுகுமுறை, ஆராய்ச்சியின் தீவிரம் மற்றும் ஆராய்ச்சியாளரின் திறன் ஆகியவை ஆராய்ச்சி பிரச்சனைக்கான தகவல்களை வகைப்படுத்துவதற்கு தேவைப்படுகின்றன.

எனவே, ஆய்வு ஆராய்ச்சியில் பயன்படுத்தப்படும் முறையானது நெகழ்வுத்தன்மையுடன் இருத்தல் தேவை. எனவே பிரச்சனையின் பல்வேறு கோணங்களை கருத்தில் கொள்ளமுடியும். விளக்க ஆராய்ச்சி வடிவமைப்பில் பின்வருவனவை கருத்தில் கொள்ளப்பட வேண்டும்.

- சிறிய அளவிலான மாதிரிகளை பயன்படுத்தப்பட்டுள்ளன.
- துகவல் தேவைகள் தெளிவாக இல்லை
- பொதுவான நோக்கங்கள் கருத்தில் எடுத்துக்கொள்ளப் பட்டுள்ளன, குறிப்பிடத்தகுந்த நோக்கங்கள் இல்லை
- தகவல் பகுப்பாய்வுகள் செய்யப்பட்ட பின்னர் குறிப்பிடத்தகுந்த பரிந்துரைகள் தரப்படவில்லை.

### 2. விளக்க ஆராய்ச்சி வடிவமைப்பு

விளக்க ஆராய்ச்சியானது ஒரு குறிப்பிட்ட பிரச்சனை அல்லது ஒரு குறிப்பிட்ட நபர் அல்லது ஒரு குறிப்பிட்ட குழுவின் சிறப்பியல்புகளை விளக்குகிறது. விளக்க ஆராய்ச்சியானது ஆராய்ச்சி தொடர்பான குறிப்பிட்ட கணித்தல்கள், உண்மைகள், தனிநபர் அல்லது ஒரு குழு அல்லது ஒரு சூழ்நிலை தொடர்பான சிறப்பியல்புகள் மற்றும் உண்மைகளை உள்ளடக்கியுள்ளது. பெருமாபாலான சமூக அறிவியல் பாடங்களுக்கான ஆராய்ச்சிகள் இவ்வகையிலேயே செய்யப்படுகின்றன. இவ்வகை ஆராய்ச்சியில், என்ன?, ஏன்?, எங்கே மற்றும் யார்? போன்ற கேள்விகளுக்கு விடையளிக்குமாறு இருத்தல் வேண்டும்.

ஒரு விளக்க ஆராய்ச்சியை வடிவமைக்கும்போது கீழ்காணும் படிநிலைகளில் செய்யப்படவேண்டும்.

**1. ஆராய்ச்சிக்கான நோக்கங்களை உருவாக்குதல்**

இந்த படிநிலையில் திரட்டப்பட்ட தகவல்கள் இந்த ஆராய்ச்சிக்கு தொடர்புடையது என்பதை உறுதிபடுத்தும்விதமாக ஆராய்ச்சி நோக்கங்களை குறிப்பிட்டு சொல்லவேண்டும். அவ்வாறு இல்லையெனில் இவ்வாராய்ச்சியை செய்வதன் வாயிலாக நமக்கு தேவையான முடிவுகளை பெறமுடியாது.

**2. தகவல் திரட்டும் முறையை வடிவமைத்தல்**

இந்த படிநிலையில் ஆராய்ச்சியாளர் எந்த முறையை பயன்படுத்தி தனது ஆராய்ச்சிக்கு தேவையான தகவல்களை திரட்டப்போகிறார் என்பதை குறிப்பிடல் வேண்டும். அதாவது ஆராய்ச்சியாளர், உள்வாங்கும் முறை, கேள்விப்பட்டியல் முறை, நேர்க்காணல் முறை அல்லது அறிக்கைகளை சோதனையிடல் முறை போன்றவற்றில் எந்த முறையை தேர்ந்தெடுக்கப்பபோகிறார் என்பதை தெளிவுபடுத்தவேண்டும்.

**3. தகவல்களை பகுப்பாய்வு செய்தல்**

ஆராய்ச்சிக்காக திரட்டப்பட்ட தகவல்களை செயல்முறைப்படுத்தி அவற்றை முறையாக பகுப்பாய்வு செய்தல் வேண்டும். இப்படிநிலையில் மேற்கண்ட முறைகளில் ஏதேனும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்டவற்றை பயன்படுத்தி திரட்டிய தகவல்களை பகுப்பாய்வு செய்வது, அவற்றை முறையாக அட்டவணைப்படுத்துதல் மற்றும் புள்ளியல் கருவிகளை பயன்படுத்தி முடிவுகளை கண்டறிதல் ஆகியவை அடங்கும்.

**4. ஆராய்ச்சி செய்யப்பட்ட தகவல்களை அறிக்கையாக்குதல்**

ஆராய்ச்சி வாயிலாக கண்டறியப்பட்ட முடிவுகளை அறிக்கையாக தயார் செய்வதற்கு முன்னர், ஆராய்ச்சியாளர் அதன் தளவமைப்பை (layout) முறையாக திட்டமிடவேண்டும். மேலும் அதை எளிமையாகவும் பயனுள்ள வகையில் தயார் செய்யவேண்டும்.

விளக்க ஆராய்ச்சியில், பின்வரும் காரணிகளை மனதில்கொள்ள வேண்டும்.

குறிப்பு

- ஆராய்ச்சியில் மேற்கொண்ட நிகழ்வினை தெளிவாக விளக்கவேண்டும்.
- திரட்டப்பட்ட தகவல்கள் மாதிரி பதிளலிப்பவரின் நடத்தை தொடர்பான மாறிலிகளாக இருக்கலாம்.
- இதில் கொடுக்கப்படும் பரிந்துரைகள் திட்டவட்டமானதாக இருத்தல் வேண்டும்.
- ஆராய்ச்சி நோக்கங்கள் குறிப்பிடத்தகுந்ததாகவும், தேவையான தகவல்கள் தெளிவானதாகவும் மற்றும் பெரிய மாதிரி அளவினை பயன்படுத்த வேண்டும்.

விளக்க ஆராய்ச்சிக்கு ஆராய்ச்சியின் எப்போது?, எங்கே?, யார்?, என்ன?, ஏன்? மற்றும் ஏப்படி? என்பதற்கான கேள்விகளுக்கு தெளிவான குறிப்பிட்ட பதில்கள் தேவையானதாக உள்ளது. இதனுடைய முக்கியமான தேவையானது சிறப்பியல்புகளையும் பணிகளையும் விவரிப்பதாகும். இவ்வகை ஆராய்ச்சியானது பின்வரும் சூழல்களில் பரிந்துரைக்கப்படுகிறது.

- குறிப்பிட்ட கணித்தல்களை உருவாக்குவதற்கு.
- மாறிலிகளுக்கிடையேயான தொடர்புகளை வெளிக்கொணர்வதாக இருக்கும்போது.
- மக்கள்தொகையின் ஒரு விகிதாச்சாரத்தின் குறிப்பிடத்தகுந்த சிறப்பியல்புகளை கணித்தல்.
- ஒரு உற்பத்தி பொருள், ஒரு குழு, ஒரு அமைப்பு அல்லது ஒரு சந்தையின் சிறப்பியல்புகளை விள்க்குவதற்கு.

ஆய்வு ஆராய்ச்சி போன்று அல்லாமல், விளக்க ஆராய்ச்சி வடிவமைப்பில் குறிப்பிட்ட கருதுகோள்களால் குறிக்கப்படுகிறது. மேலும் தெளிவான ஆராய்ச்சி பிரச்சனை அறிக்கை மற்றும் தேவையான தகவல்கள் தெளிவாகவும் குறிப்பிடப்படுகின்றன. பொதுவாக விளக்க ஆராய்ச்சியானது கணக்கெடுப்பு, கால தகவல்கள், இரண்டாம்நிலை தகவல்கள் அல்லது கூர்நோக்கல் முறையை பின்பற்றி செய்யப்படுகிறது, இவை குறுக்கு வெட்டு அல்லது நீளமான ஆராய்ச்சி என வகைப்படுத்தப்படுகிறது.

### குறுக்கு வெட்டு ஆராய்ச்சி (Cross-Sectional Research)

ஒரு வியாபாரம் தொடர்பான ஆராய்ச்சியில் மிக அதிகமாக பயன்படுத்தப்படும் ஆராய்ச்சி முறையானது குறுக்கு வெட்ட ஆராய்ச்சி முறையாகும். இவ்வகையில் மாதிரிகளிடமிருந்து தேவையான தகவல்கள் திரட்டப்படுகின்றன, அதுவும் ஒரு முறை மட்டுமே திரட்டப்படுகின்றன. இது பல்வகை குறுக்குவெட்டு அல்லது ஒரே குறுக்குவெட்டாக இருக்கலாம்.

பலகோண குறுக்கு வெட்டு ஆராய்ச்சி வடிவமைப்பில், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாதிரிகள் உள்ளன, இருப்பினும் அனைத்து மாதிரிகளிடமிருந்தும் ஒரு முறை மட்டுமே தகவல்கள் திரட்டப்படுகின்றன. பொருவாக பல்வேறு மாதிரிகளிடமிருந்து நீண்ட கால இடைவெளிகளில் தகவல்கள் வெவ்வேறு காலக்கட்டத்தில் பெறப்படுகின்றன. பலகோண குறுக்கு வெட்டு ஆராய்ச்சி வடிவமைப்பில் ஒட்டுமொத்த தகவல்களை ஒப்பிட்டுக்கொள்ள ஏதுவாகிறது, ஆனால் இது ஒவ்வொரு மாதிரிக்கும் தனித்தனியாக செய்யப்படுவதில்லை. ஏனெனில் வெவ்வேறு மாதிரிகள் வெவ்வேறு காலக்கட்டத்தில் தேர்வுசெய்யப்பட்டு தகவல்கள் திரட்டப்படுகின்றன, எனவே மாதிரிகளை தனித்தனியாக ஒப்பிட்டு பார்ப்பது இயலாத ஒன்றாகும். இவ்வகை முறையில் முக்கியமான சிறப்பியல்பு மாதிரிக்குழு (cohort) பகுப்பாய்வு ஆகும், தகவல்கள் வெவ்வேறு காலக்கட்டத்தில் பெறப்பட்டாலும், மாதிரிக்குழு என்கிற கொள்கையின் கீழ் பகுப்பாய்வு செய்யப்படுகின்றன. இதில் மாதிரிக்குழு என்பது எந்த மாதிரிகள் ஒரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் ஒரே மாதிரியான நிகழ்வை எதிர்கொண்டனரோ அவற்றுக்கு மாதிரிக்குழு எனப்பெயர்.

**நீள் ஆராய்ச்சி வடிவமைப்பு (Longitudinal Research Design)**

குறுக்கு வெட்டு ஆராய்ச்சி வடிவமைப்பு போன்றல்லாமல், மக்கள்தொகையில் ஒரு குறிப்பிட்ட மாதிரியை தேர்வுசெய்து அவற்றில் ஒரு மாறிலியை திரும்பதிரும்ப அளவிடுவதே இம்முறையாகும். வேறுவகையில் கூறுவதாயின், காலஓட்டத்தில் சில பன்புகள் படிக்கப்பட்டு அதே மாறிலிகள் அளவிடப்படுகின்றன. குறக்குவெட்டு ஆராய்ச்சி வடிவமைப்பு போன்று அல்லாமல், இம்முறையில் படிக்கவிருக்கும் மாறிலிகளை பற்றிய ஒரு கண்ணோட்டத்தை ஒரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் அளிக்கிளது. நீள் ஆராய்ச்சி வடிவமைப்பானது ஒரு நிகழ்வினை பற்றிய ஒரு தொடர் தகவல்களை மிக ஆழமாகவும் அதில் காலஓட்டத்தில் ஏற்பட்ட மாற்றங்களையும் படிக்கிறது.

**காரண ஆராய்ச்சி வடிவமைப்பு (Causal Research Desigh)**

இவ்வகை ஆராய்ச்சி வடிவமைப்பானது ஒரு மாறிலியின் மீது மற்றொரு மாறிலியின் காரணம் மற்றும் அதன் விளைவினை படிக்கும்போது பயன்படுத்தப்படுகிறது. விளக்க ஆராய்ச்சி வடிவமைப்பை போன்றே, காரண ஆராய்ச்சி வடிவமைப்பிற்கும் பின்வரும் காரணங்களுக்காக முறையான திட்டமும் சட்டகமும் தேவைப்படுகின்றன.

- ஒரு நிகழ்வில், அதற்கான காரண மாறிலி (சார்பற்ற மாறிலி) மற்றும் அதன் விளைவு மாறிலி (சார்பு மாறிலி) ஆகியவற்றை புரிந்துகொள்வதற்காக.

- மாறிலியினால் ஏற்படும் விளைவினை முன்கனிக்க, காரண மற்றும் விளைவு மாறிலிகளின் பண்புக்கூறுகளை தீர்மாணிப்பதற்காக.

குறிப்பு

இவ்வகை வடிவமைப்பில், காரண மாறிலிகள் தொடர்புடைய கட்டுப்படுத்தப்பட்ட சூழ்நிலையில் கையாளப்படுகிறது. இதில் சார்பு மாறிலியின் மீது விளைவை ஏற்படுத்தக்ககூடிய இதர மாறிலிகளை முடிந்தவரையில் கட்டுபடுத்தப்படுகிறது அல்லது சோதனை செய்யப்படுகிறது. பிறகு ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட சார்பு மாறிலிகள் மீதான இவ்விளைவுகள் அறிக்கையில் விளக்குவதற்காக அளவிடப்படுகிறது. காரண ஆராய்ச்சியில் முக்கியமான முறையானது சோதனை ஆராய்ச்சியாகும்.

**3. கண்டறியும் / முடிவுசார் ஆராய்ச்சி வடிவமைப்பு (Diagnostic / Conclusive Research Design)**

முடிவுசார் ஆராய்ச்சி வடிவமைப்பானது விளக்க ஆராய்ச்சி வடிவமைப்பைவிட முறையான மற்றும் கட்டமைக்கப்பட்ட வடிவமைப்பாகும். இது மிகப்பெரிய பிரநிதித்துவ மாதிரி மற்றும் பெறப்பட்ட தகவல்கள் அளவுசார் பகுப்பாய்விற்கு உட்படுத்தப்படுவதை அடிப்படையாக கொண்டதாகும். முடிவுசார் ஆராய்ச்சியின் முக்கியமான நோக்கமானது மாறிலிகளுக்கிடையேயான குறிப்பிடத்தகுந்த உறவுகளை கண்டறிதல் மற்றும் குறிப்பிட்ட கருதுகோள்களை சோதனை செய்வதாகும். இந்த நோக்கங்களை அடைவதற்கு ஆராய்ச்சியாளர் தேவையான தகவல்களை தெளிவாக குறிப்பிடவேண்டும். இவ்வவை ஆராய்ச்சியல் பெறப்படும் ஆராய்ச்சி முடிவுகளானது நிர்வாகத்தில் செய்யப்படும் முடிவெடுக்கும் செயல்பாடுகளில் உள்ளீடுகளாக கொள்ளப்படுகின்றன. முடிவுசார் ஆராய்ச்சி வடிவமைப்பானது குறுக்குவெட்டு ஆராய்ச்சி வடிவமைப்பு மற்றும் நீள் ஆராய்ச்சி வடிவமைப்பு என இரண்டு வகைப்படுத்தப்படுகிறது.

**4. சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பு (Experimental Research Design)**

சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பானது பொதுவாக காரணம் மற்றும் விளைவுகளை கண்டறிய முற்படும் ஆராய்ச்சி அல்லது சோதனை ஆராய்ச்சியல் காரணம் மற்றும் விளைவுகளை கண்டறியும் எவ்வித ஆராய்ச்சிக்கும் இவ்வகை ஆராய்ச்சி வடிவமைப்பு பொருத்தப்படும். சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பானது எது எதை பாதிக்கிறது என்கிற அடிப்படையிலான உளவியல் சார்ந்த கேள்விகளுக்கு விடையளிக்கும் ஒரு கருவியாக விளங்குகிறது. சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பின் ஒரு முக்கியமான நோக்கமானது, மாறிலிகளுக்கு இடையேயான காரணம் மற்றும் விளைவுகள் பற்றிய உறவினை நிறுவுவதாகும். சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பு தொடர்பான நான்கு வகையான காரணிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

- **சார்பற்ற மாறிலிகள் (Independent Variables)**

இவை சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பில் மாறுபடக்கூடிய நிபந்தனைகள் அல்லது அளவீடுகளை குறிக்கும்.

- **சார்பு மாறிலிகள் (Dependent Variables)**

இவ்வகை மாறிலிகளை அளவீடு செய்யமுடியும் மற்றும் இவை சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பில் முடிவுகள் அல்லது விளைவுகளை குறிப்பிடுகிறது.

- **கட்டுப்படுத்தும் மாறிலிகள் (Control Variables)**

சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பில் இது நிலையானதாக இருக்கும்.

- **சீரற்ற மாறிலிகள் (Random Variables)**

சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பில் பல்வேறு நிலைகளில் இவ்வகை மாறிலிகளின் மதிப்பு மாறுபடக்கூடியதாக இருக்கும்.

சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பில் பல்வேறு மாறுபாடுகள் உள்ளன, இம்மாறுபாடுகள் பல்வேறு பிரச்சனைகளுக்கு தீர்ப்பதற்கு பல்வேறு முடிவுகளை பெறுவதற்காக உருவாக்கப்படுகிறது. உதாரணமாக, நாம் ஒரேமாதிரியான இரண்டுவகையான குழுக்களை உருவாக்குகின்றோம், அதாவது சிகிச்சை பெறும் குழு மற்றும் சிகிச்சை அளிக்கும் குழு, இதில் சிகிச்சை அளிக்கும் குழுவானது கட்டுப்படுத்தும் குழுவாகும்.

**ஆராய்ச்சி வடிவமைப்பை பாதிக்கும் காரணிகள்**

ஆராய்ச்சி வடிவமைப்பை பாதிக்கும் சில காரணிகள் கீழே தரப்பட்டுள்ளன.

- அறிவியல்பூர்வமான தகவல்களை பெறுதல்.
- போதுமான தகவல்கள், நேரம், பணம் மற்றும் பணியாளர்கள் கிடைத்தல்.
- தகவல் திரட்டலுக்கான பல்வேறு மூலங்களின் வெளிக்காட்டல்.
- ஆராய்ச்சியின் உதவியோடு தீர்க்கப்படக் கூடிய ஒரு குறிப்பிட்ட பிரச்சனையின் அளவு.
- அந்நிறுமத்தின் அல்லது அமைப்பின் உயர்மட்ட நிர்வாகத்தின் ஆதரவு.
- ஆராய்ச்சியாளரின் அறிவு மற்றும் திறமை.

**ஆராய்ச்சி வடிவமைப்பை மதிப்பிடல்**

ஒரு ஆராய்ச்சி வடிவமைப்பை மதிப்பிடும்போது பின்வரும் காரணிகளை கருத்தில்கொள்ள வேண்டும்.

- மதிப்பீடு செய்யப்படவேண்டிய ஆராய்ச்சி வடிவமைப்பின் சிறப்பியல்புகளை தீர்மாணித்தல்.

குறிப்பு

- ஆராய்ச்சி திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மூலங்களின் தொடர்பு மற்றும் உண்மைத்தன்மையை சோதனையிடல்.
- ஆராய்ச்சி வடிவமைப்பானது அறிவியல் பூர்வமான ஆராய்ச்சி செய்வதற்கான தரத்தினை உடையதா என்பதை சோதனைசெய்தல்.
- ஆராய்ச்சி வடிவமைப்பானது பகுதி சோதனையில் அல்லது சோதனையிடல் அல்லது விளக்க ஆராய்ச்சி அல்லது உறவு குறித்த ஆராய்ச்சியா என்பதை கண்டறிதல்.
- ஆராய்ச்சி வடிவமைப்பில் ஏற்படும் நெறிமுறை பிரச்சனைகளை கண்டறிதல்.
- முன்னர் செய்யப்பட்ட ஆராய்ச்சிகளை படிப்பதன் வாயிலாக இதே அல்லது இதேபோன்ற ஆராய்ச்சி முன்னர் மேற்கொள்ளப்பட்டுள்ளதா என்பதை பார்த்தல்.

## 5.5 புரிதலை சோதிக்கும் வினாக்கள்

1. ஒரு ஆராய்ச்சி திட்டத்தை மேம்படுத்துவதில் உள்ள செயல்முறைகள் யாவை?
2. பூஜ்ஜிய கருதுகோள் என்றால் என்ன?
3. **ஆராய்ச்சி வடிவமைப்பை வரையறுக்க.**
4. ஆராய்ச்சி செயல்முறையில் உள்ள படிநிலைகளை பட்டியலிடுக.
5. சோதனை ஆராய்ச்சி வடிவமைப்பின் நோக்கங்கள் யாவை?
6 ஆராய்ச்சி வடிவமைப்பை பாதிக்கும் ஏதேனும் இரண்டு காரணிகளை கூறுக.

## 5.6. பயிற்சி வினாக்கள்

1. ஆராய்ச்சி திட்டத்தை வகுப்பதன் முக்கியத்துவத்தை விவரி.
2. கருதுகோளின் சிறப்பியல்புகளை விளக்குக.
3. பூஜ்ஜிய மற்றும் மாற்றுக் கருதுகோள்களை உதாரணங்களுடன் விளக்குக.
4. ஆராய்ச்சி வடிவமைப்பின் தேவையை எழுதுக.
5. ஒரு நல்ல ஆராய்ச்சி வடிவமைப்பின் தன்மைகள் யாவை?
6. ஆராய்ச்சி வடிவமைப்பின் படிநிலைகளை விவாதி.

## 5.7. சுருக்கம்

- ஆராய்ச்சி இடைவெளி என்பது எந்த ஒரு ஆராய்ச்சி கேள்விக்கு அல்லது ஆராய்ச்சி பிரச்சனைக்கு இதுவரை மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளால் பதிலளிக்கப்பட்டிருக்கவில்லையோ அதுவேயாகும்.

குறிப்பு

- கருதுகோள் (Hypothesis) என்கிற வார்த்தையானது கிரேக்க வார்த்தையான 'hypotithenai' என்கிற வார்த்தையிலிருந்து பெறப்பட்டதாகும். இதற்கு அவ்வாறாக இருக்கலாம் (கருதுகிறேன்) என்பது பொருளாகும்.
- கருதுகோள் சோதனை என்பது, ஆராய்ச்சியாளர் வடிவமைத்த கருதுகோள் ஏற்றுக்கொள்ளக்கூடியதா அல்லது இல்லையா என்பதை தகுந்த கருவிகள் வாயிலாக சோதனையிடுதலாகும்.
- பூஜ்ஜிய கருதுகோளானது புள்ளியியல் கருதுகோள் என்று அழைக்கப்படுகிறது மேலும் இது Ho என்கிற குறியீட்டால் குறிக்கப்படுகிறது.
- பூஜ்ஜிய கருதுகோளுக்கு மாற்றாக கருதப்படுவது மாற்றுக் கருதுகோளாகும். இது H1 என்கிற குறியீட்டால் குறிக்கப்படுகிறது.
- ஆராய்ச்சி வடிவமைப்பு என்பது ஒட்டுமொத்த ஆராய்ச்சி வேலையை பற்றிய ஒரு புரிதலை தரும் கட்டமைப்பாகும்.
- ஒரு நல்ல ஆராய்ச்சி வடிவமைப்பானது ஆராய்ச்சியாளர் தனது ஒழுங்கமைக்கவும் அதன் குறைபாடுகளை சோதனையிடவும் தகவல் திரட்டலில் போதாமையையும் அறிந்துகொள்ள உதவுகிறது.
- ஆய்வு ஆராய்ச்சி வடிவமைப்பானது சூத்திர ஆராய்ச்சி வடிவமைப்பு எனவும் அழைக்கப்படுகிறது. இதில் ஒரு குறிப்பிட்ட பொருள் ஆராய்ச்சிக்குட்படுத்தப்படுகிறது.
- விளக்க ஆராய்ச்சியானது ஒரு குறிப்பிட்ட பிரச்சனை அல்லது ஒரு குறிப்பிட்ட நபர் அல்லது ஒரு குறிப்பிட்ட குழுவின் சிறப்பியல்புகளை விளக்குகிறது.

## 5.8. மேலும் பயில புத்தகங்கள்

Kothari C.R., Research Methodology – Methods and Techniques, New Age International (P) Limited Publishers, New Delhi, 2004.

Priti R Majhi and Prafull K Khatua Research Methdology (Concepts, Methods, Techniques and SPSS), Himalaya Publishing House, Mumbai, 2015.

# அலகு – 6:



# மாதிரி வடிவமைப்பு (Sample Design)



## 6.1. அறிமுகம்

இதற்கு முந்தய பாடத்தில் நாம் பொருளாதார நிர்வாகம் மற்றும் கருதுகோள்கள் பற்றி விரிவாக படித்தோம். இந்த பாடத்தில் நாம் மாதிரி வடிவமைப்பு பற்றி விரிவாக காணலாம்.

ஒரு ஆராய்ச்சியை மேற்கொள்ளும்போது, அவ்வாராய்ச்சிக்கான மாதிரியை வடிவமைப்பு செய்வது என்பது மிக முக்கியமான ஒன்றாகும். எனினும் மாதிரிகளை தேர்ந்தெடுத்து தகவல் திரட்டுதல் என்பது ஒரு நல்ல ஆராய்ச்சி முடிவினை பெறுவதற்கு போதாததாகும். ஒரு மாதிரி சட்டகத்திலிருந்து மாதிரியை பெறுவதற்கு முறையான திட்டமிடல் அவசியமாகும். ஒரு கணக்கெடுப்பை நடத்துவதற்கு முறையான திட்டமிடல் மற்றும் வடிவமைப்பு செய்தல் என்பது மிக அவசியமான ஒன்றாகும். இந்த அலகில் நாம் மாதிரி என்பது என்ன, மாதிரி வடிவமைப்பின் முக்கியத்துவம், அதன் கொள்கைகள், ஒரு நல்ல மாதிரி வடிவமைப்பின் முக்கிய கூறுகள் மற்றும் தகவல் திரட்டுதலில் பல்வேறு முறைகள் ஆகியவற்றை பற்றி நாம் விரிவாக பார்க்கப்போகிறோம். மாதிரி வடிவமைப்பு என்பது தீர்மாணிக்கப்பட்ட ஆராய்ச்சியின் மக்கள்தொகையிலிருந்து மாதிரி அல்லது மாதிரி அலகுகளை தேர்ந்தெடுக்க ஆராய்ச்சியாளர் மேற்கொள்ளும் நுட்பம் அல்லது செயல்முறையே ஆகும். மாதிரியை சரியாக தீர்மாணம் செய்வது என்பது ஆராய்ச்சியில் நம்பத்தன்மை உடைய முடிவுகளை பெறுவதற்கு உதவுகிறுது.

## 6.2. நோக்கங்கள்

குறிப்பு

இந்த அலகினை முழுமையாக படித்தப்பினனா் நீங்கள் பின்வரும் நோக்கங்களை அடைய முடியும்.

- ஒரு நல்ல மாதிரியின் முக்கிய கூறுகளை விவாதம் செய்தல்.
- மாதிரியின் தேவையை மதிப்பீடு செய்தல்.
  மக்கள் தொகை கணக்கெடுப்பு முறை மற்றும் மாதிரி முறை ஆகியவற்றை பகுப்பாய்வு செய்தல்.

## 6.3. மாதிரி வடிவமைப்பின் பொருள்

மாதிரி வடிவமைப்பு என்பது மாதிரி சட்டகத்திலிருந்து மாதிரியை பெறுவதற்கு செய்யப்பட்ட ஒரு உறுதியான திட்டம் ஆகும். இது தீா்மாணிக்கப்பட்ட ஆராய்ச்சியின் மக்கள்தொகையிலிருந்து மாதிரி அல்லது மாதிரி அலகுகளை தோ்ந்தெடுக்க ஆராய்ச்சியாளா் மேற்கொள்ளும் நுட்பம் அல்லது செயல்முறையே ஆகும். மாதிரி தகவல் என்பது இறுதியான தகவல்கள் திரட்டப்படுவதற்கு முன்னா் திரட்டப்படுவதாகும்.

**மாதிரியின் தேவை**

மாதிரி என்பதை நாம், ஒட்டுமொத்த மக்கள்தொகை பற்றிய தகவல்களை அதிரிருந்து ஒரு பகுதியை தோ்ந்தெடுத்து பெறும் ஒரு செயல்முறை என்று கூறலாம். மாதிரி என்பது பின்வரும் காரணங்களுக்காக தேவைப்படுகிறது.

- இது நேரம் மற்றும் பணம் ஆகிவற்றை சேமிக்கிறது. மக்கள்தொகை கணக்கெடுப்பினை விட மாதிரி கணக்கெடுப்பு என்பது குறைந்த செலவுடையதாக இருக்கிறது.
- மாதிரியிலிருந்து முடிவுகள் விரைவாகப் பெறப்படுகிறது.
- மாதிரி நுட்பம் வாயிலாக முறையாக திரட்டப்படும் தகவலானது ஆராய்ச்சியின் வாயிலாக துல்லியமான முடிவுகளை பெறுவதற்கு வகைசெய்கிறது.
- மக்கள்தொகை எண்ணிக்கை கணக்கிலடங்காமல் மிக அதிகமாக இருக்கும்போது மாதிரி நுட்பம் பயன்படுத்தப்படுகிறது.
- இம்முறையானது மாதிரி பிழைகளை மதிப்பீடு செய்வதற்கு வகைசெய்கிறது மேலும் மக்கள்தொகையின் ஒரு சில தன்மைகளை பற்றிய தகவல்களை பெறுவதற்கு உதவுகிறது. அதாவது வயது, பாலினம், கல்வித்தகுதி போன்றவை.

மாதிரியின் பயன்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன

- ஒரு குறிப்பிட்ட மக்கள்தொகையை பற்றி படிப்பதன் முடிவுகள் துல்லியமானதாகவும் நம்பகத்தன்மை கொண்டதாகவும் இருத்தல் வேண்டுமெனில், ஆராய்ச்சியாளர் தேவையான தகவல்களை அம்மக்கள்தொகையின் ஒட்டுமொத்தத்தத்திலிருந்து பெற்று பகுப்பாய்வு செய்தல் வேண்டும். ஆனால் இது நடைமுறைக்கு ஒவ்வாதது மற்றும் அதிக செலவு மற்றும் அதிக நேரம் எடுத்துக்கொள்ளும். இந்நிலையில் மாதிரி என்பது குறைந்த செலவுடையதாகவும்.
- மாதிரியை ஆராய்ச்சி செய்யும் செயல்பாடானது அளவில் சிறியதாகவும், மேலும் இதில் செய்யப்படும் கள வேலை மற்றும் தகவல்களை பகுப்பாய்வு செய்து முடிவுகளை பெறுவது என்பது வேகமாகவும் அதே சமயத்தில் குறைந்த காலக்கட்டத்திலும் செய்து முடிக்க முடியும்.
- மாதிரியை கொண்டு ஆராய்ச்சி செய்வதற்கு தகவல்களை பெறுவதற்கும், அவற்றை பகுப்பாய்வு செய்து முடிவுகளை பெற்று ஆராய்ச்சி அறிக்கையை தயார் செய்வதற்கு குறைந்த எண்ணிக்கையிலான பணியாளர்கள் மட்டுமே தேவைப்படுகின்றனர். எனவே இது ஒரு செலவு குறைந்த முறையாகும்.
- மக்கள் தொகை கணக்கெடுப்பு முறையைவிட மாதிரி முறையில் ஆராய்ச்சியாளர் அதிக அளவிலான ஆழ்ந்த தகவல்களை மிக வேகமாகவும் குறைந்த காலக்கட்டத்திலும் பெற முடிகிறது.
- மாதிரி முறையில் செய்யப்படும் வேலையின் அளவானது மிக குறைவாகும். இதில் நேர்காணலின் தரம் மற்றும் மேற்பார்வை மற்றும் இது தொடர்பான மற்ற வேலைகள் மக்கள் தொகை கணக்கெடுப்பு முறையை விட சிறப்பானதாக உள்ளன.
- ஆராய்ச்சிக்கு தேவையான மற்றும் போதுமான தகவல்களை நம்பகத்தன்மையுடன் மாதிரி முறை வழங்குகிறது.

**மாதிரியின் சிறப்பியல்புகள்**

வழக்கமாக, கொடுக்கப்பட்டுள்ள மக்கள்தொகையில் பல்வேறு கூறுகளை வேறுபடுத்தி காட்டுவதற்காக கவனத்தில் கொள்ளப்படவேண்டிய பன்புக்கூறுகளை தீர்மானித்தலில் மாதிரி ஈடுபடுகிறது. இவ்வாறு இனங்களை வகைப்படுத்தும் செயல்பாடு இரண்டு வகைகளாக பிரிக்கப்படுகிறது. அளவிடக்கூடியது மற்றும் தர அளவிலானது. ஆளவிடக்கூடிய மாதிரியில் மாறிலிகள் சம்பந்தப்பட்ட பன்புகளை கையாள்கிறது. மற்றொருபுறம், தர அளிவிளான மாதிரியில், பன்புக்கூறுகளின் சிறப்பியல்புகள் கையாளப்படுகின்றன.

மாதிரியின் அடிப்படையான கொள்கையானது, அதிக அளவிலான மக்கள்தொகை இருக்கும்பட்சத்தில் அவர்களின் சராசரி பன்புக்கூறுகளை கண்டறிவதற்காக அவற்றுள் சிலவற்றை தேர்ந்தெடுத்து அவற்றிடமிருந்து தகவல்கள் பெறப்பட்டு அவ்வொட்டுமொத்த மக்கள்தொகை தொடர்பான

குறிப்பு

முடிவுகளை பெறுவதற்கு முயற்ச்சி செய்வதாகும். ஊதாரணமாக, சாலையைப்பற்றிய ஒரு ஆராய்ச்சியில், சாலை என்பது மக்கள்தொகையாகும், அதனுடைய பன்புக்கூறுகளாவன, அதன் தூரம், கால அளவு, அதன் தரம், அதன் எடை தாங்கும் திறன் போன்றவைகளாக இருக்கலாம். முன்னரே சொன்னபடி, மக்கள்தொகை மிக அதிக எண்ணிக்கையில் இருக்கும்பட்சத்தில், மாதிரி வாயிலாக ஆராய்ச்சியை மேற்கொள்வது என்பது வேகமாகவும் செலவு குறைவாகவும் செய்து முடிக்க முடியும்.

எப்படியிருப்பினும், மாதிரிகளை தேர்வு செய்யும்போது எவ்வகை பன்புக்கூறுகள் கருத்தில் எடுத்துக்கொள்வது என்பது அதிமுக்கியமான ஒன்றாகும். அவ்வாறு ஒரு பன்புக்கூறினை எடுத்துக்கொள்ளும்போது அது மிக அரிதான பன்பாக இருத்தல் கூடாது. அதேபோல, அவ்வாறான பன்புக்கூறானது மிகவும் பொதுவான ஒரு பன்பாகவும் இருத்தல் கூடாது. அவ்வாறான பன்புக்கூறுகளை அடிப்படையாக கொண்டு மாதிரிகள் தேர்ந்தெடுக்கப்படும் பட்சத்தில் ஆராய்ச்சி முடிவானது அவ்வளவு நம்பகரமாக இருப்பதற்கு வாய்ப்பில்லை.

**மாதிரியின் கொள்கைகள் மற்றும் ஒரு நல்ல மாதிரியின் அத்தியாவசியங்கள்**

மாதிரி மற்றும் மாதிரி வடிவமைப்பை பற்றிய பல்வேறு கருத்துகளை நாம் பார்த்தோம். இப்போது நாம் ஒரு நல்ல மாதிரியின் கொள்கைகள் மற்றும் அவற்றுக்கான அத்தியாவசியங்களை இப்போது பார்க்கலாம்,

- **சார்பின்மை**

  ஒரு நல்ல மாதிரியின் முக்கியமான கொள்களுள் ஒன்று மாதிரி என்பது சார்பற்று இருத்தல் வேண்டும். ஏதேனும் ஒரு சார்புடையதாக மாதிரிகளை தேர்வு செய்வதனால் ஆராய்ச்சி முடிவுகள் நம்பகத்தன்மையை இழந்துவிடும்.
- **போதுமான மாதிரி அளவு**

  ஒரு ஆராய்ச்சியில் துல்லியமான முடிவுகளை பெறுவதற்கு தேவையான அளவில் மாதிரியை முடிவு செய்து தகவல்களை திரட்டுதல் வேண்டும். மேலும் மாதிரியின் போதுமான அளவினை முறையாக சோதனை செய்ய வேண்டும்.
- **தரமான மாதிரி**

  ஆராய்ச்சிக்கு தேர்ந்தெடுக்கப்படும் மாதிரியானது தரமானதாக இருத்தல் வேண்டும். அவ்வாறு இருக்கும்பட்சத்தில், ஆராய்ச்சியுடன் அதன் தொடர்பு மற்றும் துல்லியத்தன்மையை சோதனை செய்யமுடியும்.

- **புள்ளியியல் தொடர்ச்சி**

  இந்த கொள்கையின்படி மாதிரி அலகுகள் சீரற்ற முறையில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

குறிப்பு

**நிஜ வாழ்வில் மாதிரியின் பயன்கள்**

ஒவ்வொரு மனிதனும் தன் அன்றாட வாழ்வில் தெரிந்தோ தெரியாமலோ மாதிரியை பயன்படுத்துகின்றான். கீழ்காணும் உதாரணங்களை பார்த்தால் இது தெளிவாகும்.

- உங்கள் தாயார் உங்களிடம் மளிகைக்கடைக்கு சென்று நல்ல தரமான அரிசியாக வாங்கிவரசொல்லி பனித்திருக்கிறார் எனில். நீங்கள் அக்கடைக்கு சென்று கேட்கும்போது, கடைக்காரர் மூன்று விதமான அரிசிகளை வைத்திருக்கிறார். எவ்வாறு நீங்கள் அவ்விதமான அரிசியின் தரத்தினை சோதனை செய்வீர்கள். நீங்கள் அம்மூன்று வகையான அரிசியிலிருந்தும் ஒரு கை எடுத்து அதன் தரத்தினை ஆய்வு செய்து அவற்றுள் ஒன்றினை தேர்வு செய்து வாங்குவீர்கள். இந்த நடைமுறையில், ஒரு மூட்டையிலிருந்து ஒரு கை பிடி அரிசியை எடுத்து ஆய்வுசெய்கிறீர்கள், அதுவே மாதிரியாகும். அவ்வாறு செய்யும்போது அந்த கைப்பிடி அரிசியானது அந்த ஒட்டுமொத்த மூட்டை அரிசியின் தரத்தினை வெளிப்படுத்தும் என நம்புகிறீர்கள்.
- உங்கள் வீட்டிற்கு விருந்தினர்கள் வருவதை முன்னிட்டு நீங்கள் உங்கள் தாயாரை பல வகையான உணவு பதார்த்தங்களை செய்ய பனித்துள்ளீர்கள். விருந்தினர் வருவதற்கு முன்னர் உங்கள் தாயார் அனைத்து உணவு வகைகளையும் தயார் செய்து, உங்களை அழைத்து ஒரு தேக்கரண்டி அளவிற்கு ஒவ்வொரு உணவு பதார்த்தங்களிலிருந்து உங்களிடம் கொடுத்து அதன் சுவை எவ்வாறு உள்ளது மற்றும் அதில் சேர்க்கப்படவேண்டிய அனைத்து உள்ளீடுகளும் சரியான விகிதத்தில் சேர்க்கப்பட்டுள்ளனவா என்பதை அறிய சொல்வார். அவ்வாறு ஒரு தேக்கரண்டி உணவை ருசித்து அந்த ஒட்டுமொத்த அளவு உணவின் தரம் மற்றும் சுவையினை உங்களால் காணமுடிகிறது. அந்த ஒரு தேக்கரண்டி உணவானது இங்கு மாதிரியாகும்.
- நீங்கள் புத்தம் வாங்குவதற்காக புத்தக கடைக்கு செல்கிறீர்கள். ஆங்கே நீங்கள் ஒரு புத்தகத்தை வாங்குவதற்கு தீர்மாணித்து, அதன் எழுத்து நடை, அதன் தரம் எவ்வாறு உள்ளது என்பதை பார்ப்பதற்கு, மாதிரியாக ஒரு சில பக்கங்களை புரட்டி சில வரிகளை படித்து பார்ப்பீர்கள். இவை மாதிரி பக்கங்களாகும்.

**மாதிரி கருத்து மற்றும் மாதிரி சட்டகம்**

மாதிரி தொடர்பான பல்வேறு சிக்கல்களை காண்பதற்கு முன்னர், நாம் மாதிரி தொடர்பான ஒரு சில கருத்துகளை விவாதிப்பது பொருத்தமாக இருக்கும்.

**மக்கள்தொகை**

ஒரு ஆராய்ச்சி படிப்பில் மக்கள்தொகை என்பது, ஆராய்ச்சியாளர் எதில் ஆராய்ச்சி மேற்கொள்ளவிருக்கின்றாரோ அதில் உள்ள மொத்த நபர்கள் அல்லது மொத்த குழுக்கள் அல்லது மொத்த அலகுகளே மக்கள்தொகை என்று அழைக்கப்படுகிறது. உதாரணமாக, ஒரு ஆராய்ச்சியாளர் ஒரு நகரத்தில் ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தின் இருசக்கர வாகனத்தை வாங்கியோரின் திருப்தி அளவை படிக்கிறார் எனில், அவரசு ஆராய்ச்சியின் மக்கள்தொகை என்பது அந்த நகரத்தில் அந்த குறிப்பிட்ட நிறுவனத்தின் இருசக்கர வாகனத்தை வாங்கிய மொத்த நுகர்வோர்கள் மக்கள்தொகையாகும். மற்றொரு உதாரணத்தை எடுத்துக்கொள்வோம், ஒரு ஆராய்ச்சியாளர் ஒரு நிறுவனத்தில் பணியாற்றும் பணியாளர்கள் வேலை செய்வதில் அவர்களின் திருப்தி அளவை படிக்கின்றார் எனில், அந்த நிறுவனத்தில் பணியாற்றும் மொத்த பணியார்கள் மக்கள்தொகை ஆவர். ஒரு வங்கியில் சேமிப்பு கணக்குவைத்திருப்பவர்கள் எவ்வாறு வங்கியின் சேவையை மதிப்பிடுகிறார்கள் என்று ஒரு ஆராய்ச்சியாளர் படிக்கின்றார் எனில், அவரது ஆராய்ச்சியின் மக்கள்தொகையானது அந்த வங்கியில் சேமிப்பு கணக்கு வைத்திருக்கும் அனைத்து வாடிக்கையாளர்களுமாகும், அவ்வாறு அவ்வங்கியல் சேமிப்பு கணக்கு வைத்திருப்போரின் எண்ணிக்கை 1000 எனில், மக்கள்தொகை 1000 ஆகும். அவர்களில் ஆராய்ச்சியாளர் 200 நபர்களிடமிருந்து தகவல்களை பெற்று ஆராய்ச்சி செய்யவிருக்கிறார் எனில், அவ்வாராய்ச்சியின் மாதிரி அளவானது 200 ஆகும்.

**கூறுகள்**

கூறு என்பது மக்கள்தொகையில் ஒரு அலகு ஆகும். மேற்கண்ட உதாரணத்தில் ஒரு வங்கியில் சேமிப்புகணக்கு வைத்திருப்பவர்கள் 1000, இது மக்கள்தொகையாகும், இந்த 1000 வாடிக்கையாளர்களில் ஒவ்வொரு வாடிக்கையாளரும் அம்மக்கள்தொகையின் கூறுகளாவர். அதாவது இந்த ஆராய்ச்சியில் மொத்தம் 1000 கூறுகள் உள்ளன.

**மாதிரி சட்டகம்**

மாதிரி சட்டகம் என்பது மாதிரி தேர்ந்தெடுக்கும் செயல்பாட்டில் எந்த ஒரு படிநிலையிலும் மாதிரியை தோந்தெடுக்கும் விதமாக நமக்கு கிடைக்கக்கூடிய அவர்களது முறையான அடையாளங்களின் கூறுகளை உள்ளடக்கியதாகும். ஊதாரணமாக, ஒரு தொகுதியில் வாக்காளர்களின்

பட்டியலானது மாதிரி சட்டகத்தை உருவாக்கலாம். மேலும், தொலைபேசி இணைப்பு உள்ளவர்களின் பட்டியல், ஒரு பல்கலைக்கழகத்தில் பதிவுசெய்துள்ள மாணவர்களின் பட்டியல், ஒரு வகுப்பரையின் வருகைப்பதிவேடு, ஒரு நிறுவனத்தில் பணியாற்றும் பணியாளர்களின் பட்டியல் போன்றவை மாதிரி சட்டகத்திற்கு உதாரணமாகும். மக்கள்தொகை மிக அதிகமாக இருக்கும்போது மாதிரி சட்டகம் அமைப்பது என்பது இயலாத ஒன்றாகும். உதாரணமாக, குளிர்பாணம் பருகும் நுகர்வோர் என்பவர்கள் எண்ணிக்கையில் மிக அதிகம், எனவே இதற்கு மாதிரி சட்டகம் அமைப்பது என்பது இயலாத காரியமாகும்.

### முாதிரி (Sample)

இது மக்கள்தொகையின் ஒரு பகுதியாகும். இது மக்கள்தொகையின் ஒருசில கூறுகளை மட்டும் உள்ளடக்கியுள்ளது. உதாரணமாக ஒரு தொழிற்சாலையில் 450 இயந்திர பொறியாளர்கள் பணியாற்றுகின்றார்கள், அவர்களுள் 30 பணியாளர்களை மட்டும் தேர்வு செய்து ஆராய்ச்சியாளர் தகவல்களை திரட்டுகிறார் எனில், அவரது ஆராய்ச்சியின் மாதிரியானது 30 ஆகும்.

### மாதிரி அலகு (Sample Unit)

மாதிரி அலகு என்பது ஒரு மாதிரியின் ஒரு தனி உறுப்பினரைக் குறிக்கும். உதாரணமாக் ஒரு மருத்துவமனையில் மொத்தம் உள்ள உள் நோயாளிகள் 400 ஆகும், ஆராய்ச்சியாளர் அம்மருத்துவமனையின் சேவைத்தரத்தினை ஆராய்ச்சி செய்கிறார். அதற்காக அவர் அம்மொத்த நோயாளிகளில் 80 பேரை மட்டும் தகவல்கள் திரட்டுவதற்கு தேர்வு செய்கிறார் எனில் அந்த 80 பேரும் ஒட்டுமொத்தமாக மாதிரி எனவும் அவர்கள் ஒவ்வொருவரும் மாதிரி அலகு எனவும் அழைக்கப்படுகின்றனர்.

### மாதிரி செயல்முறை (Sampling)

மக்கள்தொகையிலிருந்து ஆராய்ச்சிக்கு போதுமான அளவிலான மாதிரியை தேர்வுசெய்யும் நடவடிக்கைகளுக்கு மாதிரி செயல்முறை (sampling) எனப் பெயர். இவ்வாறு செய்வதன் வாயிலாக நாம் மொத்த மக்கள்தொகையின் சிறப்பியல்புகளை அறிந்துகொள்வது மட்டுமல்லாமல் மாதிரி வாயிலாக நாம் பெறும் ஆராய்ச்சி முடிவுகளை அம்மொத்த மக்கள்தொகைக்கும் பொதுமைப்படுத்த முடியும். இம்மாதிரி செயல்முறையில் உள்ள பல்வேறு வகைகளை நாம் பின்னர் விரிவாக பார்க்கலாம்.

### மக்கள்தொகை கணக்கெடுப்பு முறை (Census method)

மக்கள்தொகையில் உள்ள அனைத்து கூறுகளையும் சோதனை செய்வது மக்கள்தொகை கணக்கெடுப்பு முறை அல்லது முழுமையான கணக்கீடு என்று அழைக்கப்படுகிறது. மக்கள்தொகை கணக்கெடுப்பு

முறை என்பது மாதிரி முறைக்கு ஒரு மாற்று முறையாகும். இம்முறை மக்கள்தொகை அளவு மிக சிறியதாக இருக்கும்போது மிகவும் பயனுள்ளதாகவும் நடைமுறைக்கு ஏற்றதாகவும் உள்ளது.

குறிப்பு

## 6.4. மக்கள்தொகை கணக்கெடுப்பு முறை மற்றும் மாதிரி முறை

ஒரு ஆராய்ச்சியில் நாம் பொதுவாக மக்கள்தொகையின் சிறப்பியல்புகளை படிப்பதில் மிக ஆர்வமாக இருப்போம். உதாரணமாக ஒரு நகரத்தில் 2 லட்சம் மக்கள் வசிக்கின்றனர், அவர்களில் எத்தனை பேர் கோடை விடுமுறை காலத்தை மலைப்பிரதேசங்களில் செலவிடுகின்றனர் என்பதை தெரிந்துகொள்ள ஆர்வமாக உள்ளோம். இதற்கு நாம் அந்நகரத்தில் உள்ள அனைத்து மக்களிடமிருந்தும் தகவல்களை திரட்டுவதன் வாயிலாக மட்டுமே அறிந்துகொள்ள முடியும். ஆவ்வாறு அந்நகரத்தின் அனைத்து மக்களிடமிருந்தும் நாம் தகவல்களை திரட்டும்போது அது மக்கள்தொகை கணக்கெடுப்பு முறை என்று அழைக்கப்படுகிறது. இதற்கு மாற்றாக நாம் அம்மக்கள்தொகையில் ஒரு துணைக்குழுவினை தேர்ந்தெடுத்து அவர்களிடமிருந்து தகவல்களை திரட்டியும் தெரிந்துகொள்ளலாம். இந்த துணைக்குழுவிற்கு மாதிரி என்று பெயர். இவ்வாறு அம்மாதிரிகளிடமிருந்து திரட்டப்பட்ட தகவல்களை கொண்டு ஒரு முடிவினை எட்டும்போது அதைக்கொண்டு நாம் அவ்ஒட்டுமொத்த மக்கள்தொகைக்கும் அதை பொதுமைப்படுத்த முடிகிறது. எப்படியாகினும் மாதிரி என்பது மக்கள்தொகையின் ஒரு பிரநிதித்துவமேயாகும். அவ்வாறு அம்மாதிரியானது அம்மக்கள்தொகைக்கு சரியான பிரநிதித்துவமாக இருக்கவேண்டுமெனில், மாதிரி அலகுகளானது அம்மக்கள்தொகையில் அதே விகிதத்தில் தேர்வுசெய்யப்பட வேண்டும். உதாரணமாக, ஒரு நகரத்தில் உள்ள மக்களதொகையில், 50 சதவீதம் பேர் குறைந்த வருமானமுடையவர்கள், 35 சதவீதம் பேர் நடுத்தர வருமானம் உடையவர்கள் மற்றும் 15 சதவீதம் பேர் அதிக வருமானம் உடையவர்கள் எனில். ஆராய்ச்சியாளர் மாதிரியை தேர்வு செய்யும்போது அதே விகிதத்தில் அம்மாதிரியை தேர்வு செய்யவேண்டும். அதாவது அவரது மொத்த மாதிரியில் குறைந்த வருமானம் உடையவர்களில் 50 சதவீதம், நடுத்தர வருமானம் உடையவர்கள் 35 சதவீதம் மற்றும் அதிக வருமானம் உடையவர்கள் 15 சதவீதம் பேர் உள்ளடக்கப்பட்டிருக்க வேண்டும், இவ்வாறு தேர்வுசெய்யும்போது அம்மாதிரி அம்மக்கள்தொகைக்கு சரியான பிரநிதித்துவமாக இருக்கும். முக்கள்தொகை கணக்கீட்டு முறையைவிட மாதிரி முறை கீழ்காணும் நண்மைகளை கொண்டுள்ளது.

- மாதிரி முறையானது நேரத்தையும் செலவுகளையும் மிச்சப்படுத்துகிறது. உதாரணமாக நாம் ஒரு ஆராய்ச்சியில்

சென்னையில் உள்ள குடும்பங்களின் மாதாந்திர உணவு செலவு பற்றி அறிய விரும்புகிறோம். சென்னையின் தற்போதய (2021) மக்கள்தொகையானது 1.12 கோடியாகும், ஒரு குடும்பத்தில் 5 உறுப்பினர்கள் உள்ளனர் எனக்கொண்டால், சென்னையில் மொத்தம் உள்ள குடும்பங்களின் எண்ணிக்கை 22.4 லட்சம் ஆகும். மேற்கண்ட அனைத்து குடும்பங்களிலிருந்தும் அவர்களின் மாதாந்திர உணவு செலவினை அறிந்துகொள்வது என்பது மிகவும் அதிக செலவும் நேர செலவும் கொண்டதாகும். ஏனெனில், இதற்காக நாம் பல விசாரனையாளர்களை தேர்வு செய்து அவர்களுக்கு பயிற்சியளித்து அவர்களை கொண்டு இத்தகவல்களை திரட்டுதல் வேண்டும். அதற்கு பதிலாக நாம் அம்மொத்த குடும்பங்களில் 2000 குடும்பங்களை மாதிரியாக தேர்வு செய்து அவர்களிடமிருந்து தேவையான தகவல்களை திரட்டி ஆராய்ச்சி செய்யலாம். இது நேரத்தையும் பணத்தையும் மிச்சப்படுத்துகிறது.

- பெரும்பாலும் முடிவெடுப்பவர்கள் அனைத்து தகவல்களும் வரும்வரை காத்திருக்கவேண்டியுள்ளது. மக்கள்தொகை கணக்கெடுப்பு முறையில் கால செலவு அதிகம் ஆவதால், முடிவெடுக்கும் கால அளவும் அதிகமாகிறது. ஆனால் மாதிரி முறையில் விரைவாக தகவல்களை திரட்ட முடிவதால், அத்தகவல்களை கெண்டு முடிவெடுப்பவர்கள் விரைவாக தங்கள் முடிவுகளை எடுக்க முடிகிறது.
- மாதிரி என்பது ஒரு கருத்தே என பல நேரங்களில் கருதப்படுகிறது. நாம் ஒரு மின் குழல் விளக்கின் தரத்தினை முன்கனிக்கின்றோம் எனில், நாம் அந்த குழல் விளக்கினை அது பழுதடையும்வரை எரியவிட்டு கனிக்கின்றோம், இவ்வாறான ஆராய்ச்சியலி நாம் மக்கள்தொகை கணக்கெடுப்பு முறையை கையாள முடியாது, ஏனெனில் அவ்வாறு அனைத்து குழல் விளக்குகளையும் பழுதடையும்வரை எரிய விட்டால் நாம் பயன்படுத்த ஒரு குழல் விளக்கும் எஞ்சியிருக்காது. எனவே மாதிரி என்பது தேர்ந்தெடுப்பே ஆகும்.
- முழுமையான கணக்கெடுப்பு முறையை விட மாதிரி முறை சில சமயங்களில் நம்பிக்கையான முடிவுகளை வழங்குகிறது. மக்கள்தொகை கணக்கெடுப்பு முறையில் அதன் அளவு அதிகமாக இருக்கிறது, இவர்களிடமிருந்து தகவல்கள் திரட்டும்போது சோர்வு அதிகமாகிறது, இதனால் அதிக பிழைகள் ஏற்பட வாய்ப்புள்ளது. ஆனால் மாதிரி முறையில் அதன் எண்ணிக்கை குறைவாக இருப்பதனால் தகவல் திரட்டும்போது சோர்வு குறைகிறது, இதனால் பிழைக்கான வாய்ப்பு குறைவாகவே உள்ளது.

மக்கள்தொகை கணக்கெடுப்பு முறை என்பது மக்கள்தொகையின் அளவு குறைவாக இருக்கும்பொது ஏற்ற முறையாகும். உதாரணமாக, ஒரு ஆராய்ச்சியாளர் ரிசர்வ் வங்கி வெளியிட்ட புதிய நிதி கொள்கை தொடர்பான கருத்துகளை இந்நாட்டில் உள்ள வங்கிகளின் உயர்மட்ட நிர்வாகிகளிடம் பெறுவதாக கொண்டால், நாட்டில் உள்ள வங்கிகளின்

எண்ணிக்கையானது குறைவானதே மற்றும் அவர்களில் உயர்மட்ட நிர்வாககளும் குறைவான எண்ணிக்கையிலேயே உள்ளனர், இந்த சூழலில் நாம் மக்கள்தொகை கணக்கெடுப்பு முறையை தேர்வு செய்வது என்பது பொறுத்தமாக இருக்கும். மற்றொரு உதாரணத்தை எடுத்துக்கொள்வோம், நாம் தமிழகத்தில் உள்ள சிமெண்ட உற்பத்தி செய்யும் ஆலைகளின் எதிர்காலத்தை முன்கனிப்பதற்காக தமிழகத்தில் உள்ள சிமெண்ட் ஆலைகளின் உயர்மட்ட நிர்வாகிகளிடமிருந்து தகவல்கள் திரட்டப்போகிறோம் எனில், தமிழகத்தில் உள்ள சிமெண்ட் ஆலைகளின் எண்ணிக்கையானது மிகக்குறைவே மற்றும் உயர்மட்ட நிர்வாகிகளின் எண்ணிக்கையும் குறைவே, எனவே இம்மாதிரியான ஆராய்ச்சிகளில் நாம் மக்கள்தொகை கணக்கெடுப்பு முறையை பின்பற்றலாம். எனவே மக்கள்தொகையின் எண்ணிக்கை குறைவாக இருக்கும்போது நாம் மக்கள்தொகை கணக்கெடுப்பு முறையையும், மக்கள்தொகை எண்ணிக்கை அதிகமாக இருக்கும்போது நாம் மாதிரி முறையையும் பின்பற்றலாம்.

### மாதிரி செயல்முறை வகைகள் (Methods of Sampling)

மாதிரி செய்முறையானது மாதிரி முறையில் அனைத்து கூறுகளிடமிருந்து தகவல்களை திரட்டுவதில் முக்கியமானதாகும். ஒரு ஆராய்ச்சியாளர் தனது ஆராய்ச்சிக்கு மாதிரி செயல்முறை வயையை தேர்வு செய்வதற்கு முன்னர், பல்வேறு மாதிரி செயல்முறை வகைகளை தெரிந்துகொள்ள வேண்டும். பொதுவாக சந்தையியல் பாடத்தில் ஆராய்ச்சியை மேற்கொள்ளும்போது அதற்கு பெரும்பாலும் நிகழ்தகவு மாதிரி முறை மற்றும் நிகழ்தகவு அல்லாத மாதிரி முறை என இரண்டு முறைகள் மிக முக்கியமானதாக கருதப்படுகிறது. இவற்றை பற்றி நாம் விரிவாக அடுத்த அலகில் காண்போம்.

## 6.5. சுருக்கம்

- மாதிரி வடிவமைப்பு என்பது மாதிரி சட்டகத்திலிருந்து மாதிரியை பெறுவதற்கு செய்யப்பட்ட ஒரு உறுதியான திட்டம் ஆகும். இது தீர்மாணிக்கப்பட்ட ஆராய்ச்சியின் மக்கள்தொகையிலிருந்து மாதிரி அல்லது மாதிரி அலகுகளை தேர்ந்தெடுக்க ஆராய்ச்சியாளர் மேற்கொள்ளும் நுட்பம் அல்லது செயல்முறையே ஆகும்.
- வழக்கமாக, கொடுக்கப்பட்டுள்ள மக்கள்தொகையில் பல்வேறு கூறுகளை வேறுபடுத்தி காட்டுவதற்காக கவனத்தில் கொள்ளப்படவேண்டிய பன்புக்கூறுகளை தீர்மானித்தலில் மாதிரி ஈடுபடுகிறது.
- மாதிரியின் அடிப்படையான கொள்கையானது, அதிக அளவிலான மக்கள்தொகை இருக்கும்பட்சத்தில் அவர்களின் சராசரி பன்புக்கூறுகளை கண்டறிவதற்காக அவற்றுள் சிலவற்றை

